ஸ்ரீ:

திருப்பாணாழ்வார் திருவடிகளே ஶரணம்





# அமலனாதிபிரான் வ்யாக்$_2$யானங்கள்

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையும்,
அழகியமணவாளப்பெருமாள்நாயனாரும்
அருளிச்செய்தவை-அரும்பதவுரையுடன் கூடியது.

ஸர்வஜித்-உத்திரம் 2008

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# அமலனாதிபிரான் வ்யாக்₂யாநங்கள்

பரமகாருணிகரான
பெரியவாச்சான்பிள்ளையும்,
அழகியமணவாளப்பெருமாள்நாயனாரும்
அருளிய வ்யாக்₂யாநங்கள்
(அரும்பதவுரையுடன்)

பதிப்பாசிரியர் & கிடைக்குமிடம்
R ரகுராமன்,M.A.,M.Phil.,
24/71.புத்தூர் அக்ரஹாரம், திருச்சி:620 017,

விலை: Rs. 60/-

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

## அடியேன் செய்யும் விண்ணப்பம்

''பேர்ச்சூடுமவர்கள் மண்பற்றுக்கழற்றுதாப் போலே ஜ்ஞாநியை விக்$_3$ரஹத்தோடே ஆத$_3$ரிக்கும்'' (ஸ்ரீவை.பூ$_1$-168) என்றார் லோகதே$_3$சிகன். ஜ்ஞாநியினுடைய ஜ்ஞாநபரிமளிதமான தே$_3$ஹத்தை ஆசைப் [illegible]க்கும் எம்பெருமான் திருப்பாணாழ்வாரைத் திருமேனியோடே அங்கீ$_3$கரித்தான். இதுவே மற்றை ஆழ்வார்களைக் காட்டிலும் பாண்பெருமாளுக்குண்டான பெருமையாகும்.

பரமாசார்யரான ஆளவந்தார் தம்முடைய அந்திம தசையிலே, 'தஞ்சமாயிருப்பதொரு அர்த்த$_2$த்தை ப்ரஸாதித்தருளவேணும்' என்று ப்ரார்த்தி$_2$த்த திருக்கோட்டியூர்நம்பி முதலானோர்க்கு, ''பெரியபெருமாள் திருவடிகளின் கீழே வீணையும் கையுமாய் ஸேவித்திருக்கும் திருப்பாணாழ்வார் விக்$_3$ரஹத்தை ஸத$_3$ா பாத$_3$ாதி$_3$கேசாந்தமாக ஸேவித்துக்கொண்டிருங்கோள்'' என்றருளினர். பரமாசார்யவசநமே பரமப்ரமாணமாதலால் பாண்பெருமாளின் பாத$_3$ங்களே பாரோர்க்கு புகலென்று புலனாகிறது.

திருவரங்கத்தமுதனார் இராமாநுசநூற்றந்தாதியில்

*(11)"சீரியநான்மறைச்செம்பொருள் செந்தமிழால் அளித்த பாரியலும் புகழ்ப் பாண்பெருமாள்"* என்றருளினர். எம்பெருமானருக்கு முதலாழ்வார்களின் ஸம்ப$_3$ந்த$_4$த்தைக் கூறிய பிறகு, திருமழிசைப்பிரானது ஸம்ப$_3$ந்த$_4$த்தைக் கூறுவது க்ரமப்ராப்தமாயிருக்க, இடையே திருப்பாணாழ்வாரை ப்ரஸ்தாவித்ததன் காரணத்தை, 'ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வார் 'பாலேய் தமிழர்' என்று முதலாழ்வார்களைக் கூறியவுடன், 'இசைகாரர்' என்று திருப்பாணாழ்வாரைக் கூறியதால் அமுதனாரும் ஆழ்வாரை அடியொற்றுகிறார்' என்பர் ஆன்றோர். இப்பாட்டின் வ்யாக்$_2$யாநாவதாரிகையில் பிள்ளைலோகம்ஜீயர் "'இசைகாரர்' என்று நம்மாழ்வாராலே கொண்டாடப்பட்ட மஹா வைப$_4$வத்தையுடையவரான திருப்பாணாழ்வார்" என்று கூறியிருப்பதாலும் இது ஸ்பஷ்டம்.

அழகியமணவாளப்பெருமாள் நாயனார் ஆசார்ய ஹ்ருத$_3$யத்திலே (85) "புஷ்பத்யாக$_3$ போ$_4$க$_3$ மண்ட$_3$பங்களில் பணிப்பூவும் ஆலவட்டமும் வீணையுங்கையுமான அந்தரங்கரை முடிமன்னவனும், வைதி$_3$கோத்தமரும், மஹாமுநியும் அநுவர்த்தித்த க்ரமமும்...அறிவார்க்கிறே ஜந்மோத்கர்ஷாபகர்ஷங்கள் தெரிவது" என்றருளிச்செய்தார். போ$_4$க$_3$மண்ட$_3$பமான திருவரங்கம் பெரியகோயிலிலே வீணையும்

[illegible] பெரியபெருமாளைப் பாடிய திருப்பாணரை, [illegible]ணோத்தமரான லோகஸாரங்க$_3$ மஹாமுனிவர் தமது தோள்களில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்தமையால் எம்பெருமானுடைய அடியார்கள் எக்குலத்தோராயினும் உயர்ந்தவரே என்பது [illegible]றது. பஞ்சமவர்ணத்திலே பிறந்திருந்தாலும் [illegible]பெருமாள் பரமோத்க்ருஷ்டரே யாவார். [illegible]ந்தாசார்யர் கு$_3$ருபரம்பராஸாரத்தில் '[illegible]ணநாதன்' என்றருளிச்செய்தார்.

''[illegible]வனே மதுசூதனனே மாதவனே மறையோர் [illegible] ஆயர்களேற்றினே'' என்கிற பெரியாழ்வார் திருமொழி(4–10–10)ப்பாசுர வ்யாக்$_2$யாநத்தில் [illegible]மாமுனிகள் ''மறையோர்'' என்பது [illegible]ழ்வாரை என்று திருவுள்ளம் பற்றுகிறார். [illegible] உபதேசரத்தினமாலையில் 'நற்பாணன்' என்றும், ''[illegible] புகழ்ப் பாணர்'' என்றும் முனிவாஹநரைக் [illegible]டுகிறார். பரமபத$_3$த்தில், ''ஏதத் ஸாமக$_3$ாயந் [illegible]'' என்கிறபடியே ஸாமக$_3$ாநத்தாலே [illegible] எம்பெருமானை ஏத்தும் முக்தர்களிலே [illegible], ''அண்டர்கோன் அணியரங்கன்'' (அமலன்–10) என்கிறபடியே வைகுண்ட$_2$நாத$_2$ன் [illegible]பெருமாளாகக் கோயிலிலே வந்து [illegible]ருளியவுடன், இங்கே திருப்பாணாழ்வாராகத் [illegible]வதரித்தார் என்று இவர் வைப$_4$வத்தை

அருளிச்செய்தார் பிள்ளைலோகம்ஜீயர்.

அநந்தாசார்யர் தாமருளிச்செய்த ப்ரபந்நாம்ருதத்திலே ''அயம் ஜக்$_3$ராஹ க்ருபயா ரங்கே$_3$ பேமா முநிவாஹநம்। ரங்க$_3$ஸ்த$_2$லஸ்ய முக்$_2$யத்வம் தேநாபூ$_1$த்தஸ்ய பூ$_4$தலே॥ என்று பாண்பெருமாளைப் பெரியபெருமாள் கருணையோடு ஏற்றுக்கொண்டதனுலேயே உகந்தருளினநிலங்களிலே கோயில் (திருவரங்கம்) முதன்மையான தி$_3$வ்யதே$_3$ஶமாகக் கருதப்படுகிறது என்றுர்.

திருப்பாணுழ்வார், பெரியபெருமாள் விஷயமாக 'அமலனுதிபிரான்' என்று தொடங்கிப் பத்துப் பாசுரங்களை அருளிச்செய்துள்ளார் என்பது அனைவரும் அறிந்ததேயாகும். மிகக்குறைந்த பாசுரங்களைப்பாடி மிகுந்த பெருமைபெற்ற ஆழ்வார் இவரேயாவார். இந்த அமலனுதிபிரானைப்பற்றி வேத$_3$ாந்தாசார்யர் ''வேதியர்தாம் விரித்துரைக்கும் விளைவுக்கெல்லாம் விதையாகுமிது'' என்றும், ''பாண்பெருமாள் அருளிச்செய்த பாடல்பத்தும் பழமறையின் பொருள்'' என்றும் கொண்டாடியுள்ளார்.

ஸகலவேத$_3$ஸாரமாய், மூன்றெழுத்துக்கொண்டதான ப்ரணவத்தை 'அமலன்', 'உவந்த' 'மந்தி' என்று தொடங்கும் முதல்மூன்று பாட்டுக்களின் முதலெழுத்துக்களிலே காட்டி, வேத$_3$ப்ரதிபாத்$_3$யம்

ம்பெருமானுடைய திருவடிநிலைகளே என்பதனை 'ாரம்' 'துண்ட' 'கை' என்று தொடங்கும் ாட்டுக்களின் முதலெழுத்துக்களினாலே காட்டினமை அமலனாதிபிரானுக்கேயுண்டான தனிச்சிறப்பாகும்.

இந்த அமலனாதிபிரானுக்கு வ்யாக்$_2$யாநமருளிச் செய்த பூர்வாசார்யர்கள் மூவர். அவர்களாவார்- ரியவாச்சான்பிள்ளை, அழகியமணவாளப்பெருமாள் யனார் மற்றும் வேத$_3$ாந்தாசார்யர் ஆவர். ரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்$_2$யாநம் ருக்கமானதாகவும், ஆழ்ந்தபொருள்களைத் ளகத்தே கொண்டதாகவும் உள்ளது. நாயனாருடைய வ்யாக்$_2$யாநம் இதற்கு விவரணம் போலே அமைந்துள்ளது. நாயனார் தமது வ்யாக்$_2$யாநத்தில் யெழுப்பிவிடையளிப்பதும், த்$_3$ருஷ்டாந்தங்கள் ட்டுவதும், ஒருபாட்டிற்கும் அடுத்தபாட்டிற்கும் ங்க$_3$தி கூறுவதும், உவமைகள் கூறுவதும், மாயணம், ஸ்ரீரங்க$_3$ராஜஸ்தவம் முதலான ந்த$_2$ங்களிலிருந்து மேற்கோள்களை உத$_3$ாஹரித்து ாக்குவதும், ஐதிஹ்யநிர்வாஹங்கள் காட்டுவதும் ணி எண்ணி இன்புறத்தக்க வகையில் மைந்துள்ளன. இவ்வருடம் பெரியவாச்சான்பிள்ளை பதினன்காவது ஷஷ்ட்யப்$_3$த$_3$பூர்த்தியும், ரின் 800ஆவது திருநக்ஷத்ரமும் நேரிட்டதால் விரு வ்யாக்$_2$யானங்கள் தற்போது பதிப்பித்து

வெளியிடப்படுகின்றன.

இந்நூலில், முதற்கண் ஆறுயிரப்படி கு$_1$ருபரம்பரையிலுள்ளபடியே திருப்பாணாழ்வார் வைப$_4$வம் அளிக்கப்பட்டுள்ளது. இக்காலத்தில், திருப்பாணாழ்வாரின் சரித்ரத்தைக் கூறும் நூல்களில், லோகஸாரங்க$_3$முனிவர் திருப்பாணாழ்வாரிடம் அபசாரப்பட்டதாகக் கூறப்படுகிறது. இது அழகிய மணவாளப்பெருமாள்நாயனாரின் அமலனாதிபிரான் வ்யாக்$_2$யாநத்தோடு முரண்பட்டதாகவுள்ளது. நாயனாரின் 'கொண்டல்வண்ணன்' பாசுர வ்யாக்யாநாவதாரிகையில், 'பெரியபெருமாள், "என்னுடைய அடியார்கள் இழிகுலத்திலே பிறந்திருந்தாலும், அவர்கள் தொழத்தக்கவர்களே' என்று ஏகாந்தத்திலே உபதே$_3$சித்திருந்தபடியாலும், ஆழ்வார்களின் பாசுரங்களாலே அடியார்களின் ஏற்றத்தைக் கேட்டிருந்தபடியாலும் லோகஸாரங்க$_3$முனிவர் எம்பெருமான் நியமித்தவுடனேயே சென்று திருப்பாணரை ஸிரஸாவஹித்துக்கொண்டு வந்தார்' என்று பொருள்படக்கூறப்பட்டுள்ளது (பக்கம்150,151). ப$_1$க வத்$_3$வசநத்தால் ப$_4$ாக$_3$வதர்களின் பெருமையைக் முன்பே கேட்டிருந்த லோகஸாரங்க$_3$முனிவர் பாண்பெருமாளிடம் அபசாரப்பட ப்ரஸக்தியில்லை. திருப்பாணாழ்வார் மாநஸாநுப$_4$வம் பண்ணுபவராதலால், மநநபரரான முனிவரையிட்டு அவரை

யழைத்துக்கொண்டதாகவே அவ்விடத்து வ்யாக்2யாநத்தில் கூறப்பட்டுள்ளது.

மணவாளமாமுனிகளுக்குப் பிற்பட்ட காலத்தில் எழுதப்பட்ட ப்ரபந்நாம்ருதம் முதலிய நூல்களிலேயே லோகஸாரங்க3முனிவர் அபசாரப்பட்டதாகக் கூறும் இக்கதை காணப்படுகிறது. ப்ராசீன க்3ரந்த2மான தி3வ்யஸூரிசரிதத்தில் இக்கதை கூறப்படவில்லை. வடிவழகியநம்பித3ாஸரின் ஆழ்வார்கள் வைப4வ நூலிலும் இது சொல்லப்படவில்லை. ஆறாயிரப்படி கு3ருபரம்பராப்ரப4ாவப்பதிப்புகளில் திருப்பாணாழ்வார் வைப4வத்தில் இரண்டு பாட2ங்கள் காட்டப் பட்டுள்ளன. அடைப்புக்குறிக்குள் அச்சிடப்பட்டுள்ள இக்கதை எல்லாப்ரதிகளிலும் இல்லை என்பது அடிக்குறிப்பினால் உணரலாகிறது. ஆகவே இக்கதையினை ப்ரக்ஷிப்தம் என்றே கொள்ளத்தகும். ''சொல்லுமவிடு கருதியாம்'' (ஞானஸாரம்-40) என்கிறபடியே நமக்கு பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளே வேத3த்திற்கு ஸமமான ப்ரமாணமாகும். பூர்வாசார்ய வசநவிருத்3த4மாக பிற்காலத்தவர்களால் புனையப்பட்ட இக்கதை அநாத3ரணீயமேயாகும் என்பது அடியேனுடைய அபி4ப்ராயமாகும். ஆதலால் ஆறாயிரப்படி கு3ருபரம்பரையின் திருப்பாணாழ்வார் வைப4வத்தி லுள்ள ஸூத்3த4பாட2த்தையே இந்நூலில்

கொடுத்துள்ளோம். அதனையடுத்து பெரியவாச்சான் பிள்ளை வைப₄வத்தைச் சேர்த்துள்ளோம். யதீந்த்ரப்ரவணப்ரப₄ாவம் மற்றும் பெரியதிருமுடி யடைவு ஆகிய நூல்களிலுள்ள சொற்றொடர்களைத் தொகுத்து நாயனர் வைப₄வத்தை அளித்துள்ளோம். அமலனுதிபிரான் வ்யாக்₂யாநத்தின் பழையபதிப்பு களைப் பார்த்து பாடபே₄த₃ங்களை இப்புத்தகத்தின் இறுதியில் இணைத்துள்ளோம்.

ஸ்வாமி எம்பெருமானுராலே 'எங்கள் ஆழ்வானே' என்று உகந்து அபி₄மாநிக்கப்பட்ட ஸ்ரீவிஷ்ணுசித்தாசார்யரின் திருவம்பத்திலுதித்தவராய், திருவெள்ளறை ஸந்நிதி₄யின் முதல்தீர்த்தகாரராய், கோயில் நாலாயிரஅத்₄யாபகராய் எழுந்தருளியுள்ள அஸ்மத₃ாசார்யர் அம்மாள் ஸ்ரீ.உவே.ஸௌம்ய நாராயணுசார்ய ஸ்வாமி இந்நூலினைச் சிறந்தமுறையில் வெளியிட பல்வகையிலும் உதவிபுரிந்தார். அவருக்கு 'தலையல்லால் கைம்மாறிலேனே' (நாச்.திரு.5–6) என்று அடியேனுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னையுமெங்கள் குடிமுழுதாட்கொண்ட மன்ன(பெரியாழ்.திரு.2–5–1)ராய், பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட(திருவாய்.4–8–2)வராய், ஸ்ரீவைஷ்ணவ ஸ~த₃ர்ஸந பத்ராதி₄பராய்,

அஸ்மஞ்ஜ்ஞாநாசார்யருமாயுள்ள ஸுத$_3$ர்ஶநர் ஸ்ரீ.உ.வே.க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி "உபந்யாஸங்களை செவிமடுக்கும் ஶ்ரோதாக்கள், கேட்டவர்த்த$_2$ங்களை மறந்துவிடக்கூடுமாதலால், உபந்யாஸம் பண்ணுதலாகிற வாசிககைங்கர்யத்தைக் காட்டிலும் பூர்வாசார்யக்$_3$ரந்த$_2$ப்ரகாஶந கைங்கர்யமே சாலச்சிறந்ததாகும்" என்று அஸக்ருத் அருளிச்செய்வர். ஸுத$_3$ர்ஶனர் ஸ்வாமியின் அநுக்$_3$ரஹமும், அவரோடு அடியேனுக்குள்ள நெருங்கிய ஸம்ப$_3$ந்த$_4$முமே இந்நூல் வெளிவருவதற்கு மூலகாரணமாதலின், ஸுத$_3$ர்ஶநர் ஸ்வாமியின் பாத$_3$கமலங்களைப் பணிந்து நிற்கிறேன்.

மணவாளமாமுனிகளின் பூர்வாஶ்ரம திருவம்ஶ்யராயும், அடியேனுடைய ஜ்ஞாநாசார்யர்களுள் ஒருவராயுமுள்ள கோமடம் ஸ்ரீ.உ.வே. ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமி, அடியேனுக்கு அமலனாதிபிரான் வ்யாக்$_2$யாநங்களைக் காலக்ஷேபம் ஸாதிக்கும்போதே, முந்தைய அமலனாதிபிரான் வ்யாக்$_2$யாந பதிப்புகளில் புகுந்திருந்த அச்சுப் பிழைகளைச்சுட்டிக்காட்டியது, இப்பதிப்பின் போது அடியேனுக்கு மிகவும் உபயோக$_3$மாகவிருந்தது. மேலும் இந்த ஸ்வாமியே பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்$_2$யாந ஸ்ரீகோஶங்களிலிருந்த பாட$_2$பே$_4$த$_3$ங்களைப் பரிஶீலநம் செய்து, ஶுத்$_3$த$_4$பாட$_2$த்தை

அறிவதற்கும் துணைபுரிந்தார். ஆதலால், தாளும் தடக்கையும் கூப்பிப் பணி(திருவாய்.3–7–2)ந்து அவருக்கு அடியேனுடைய த$_4$ந்யவாத$_3$ங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் அச்சகத்தாள்களை, தாமாகவே முன்வந்து திருத்திக்கொடுத்த அடியேனுடைய ஸம்ஸ்க்ருதாத்$_4$யாபகர்களுள் ஒருவரான கோயிலாத்தான் ஸ்ரீ.உ.வே.விஜயராக$_4$வாசார்ய ஸ்வாமிக்கும், கலையறக்கற்ற(திருமாலை–7)வரான ஸ்ரீ.உ.வே. ப$_4$ரதரகு$_4$பதி ஸ்வாமிக்கும் அடியேனுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஶுத்$_3$த$_4$பாட$_2$த்தையறியும்படி பழைய பதிப்புக் களின் நகல்களைக் கொடுத்துதவிய ஸ்வாமிகள் அனைவருக்கும் அடியேனது நன்றி உரித்தாகுக.

‘ஶ்ரேயாம்ஸி ப$_3$ஹுவிக்$_4$நாநி ப$_4$வந்தி’ என்கிறபடியே எண்ணற்ற இடையூறுகள் ஏற்பட்டபோதிலும் தடைக்கற்களையே படிக்கற்களாகக் கொண்டு இந்நூலினை நன்முறையில் கணினி எழுத்துக்களில் வடிவமைத்துக்கொடுத்த மிக்கசீர்த் தொண்ட(பெரிய திரு. 11–1–9)ரான ஸ்ரீ.உவே. ஆராவமுதய்யங்கார் ஸ்வாமியைக் குறித்து ‘எந்நன்றி செய்தேனா என்நெஞ்சில் திகழ்வதுவே’(திருவாய்.10–6–8) ‘உனக்கோர் கைம்மாறு நான்

k

ஒன்றிலேன்'(திருவாய்.5-7-10) என்று அநுஸந்தி$_4$த்து நிற்கிறேன்.

உறையூர் நாச்சியார் சேர்த்தி படத்தை அளித்த அட்வகேட் ஸ்ரீ.உ.வே.கே$_3$ாவிந்த$_3$ராஜன் ஸ்வாமிக்கும், அவ்வப்போது உதவிய சிரஞ்ஜீவி. சக்ரவர்த்திக்கும் அடியேனுடைய நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூலினை நன்முறையில் அச்சடித்துக்கொடுத்த ஆர்.என்.ஆர். பதிப்பக உரிமையாளருக்கும் எமது நன்றியுரித்தாகுக.

| | |
|---|---|
| ஸர்வஜித் | ராமாநுஜத$_3$ாஸன், |
| பங்குனி உத்திரம் | ஆர்.ரகு$_4$ராமன். |
| 21-3-2008. | (பாலாஜி) |



திருப்பாணாழ்வார் - உறையூர்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

# திருப்பாணாழ்வார் வைபவம்

(ஆறாயிரப்படி கு3ருபரம்பராப்ரப4ாவம்)

ஸ்ரீலோகஸாரங்க3 மஹாமுநீந்த்3ர
ஸ்கந்த4ாதி4ருட4ம் கலயாமி நித்யம் ।
களங்க3ஹீநம் கமநீயப4க்தம்
கவீஸ்வரம் க3ாயகஸார்வபெ4ளமம் ।।

ஸ்ரீவேலாப்3த3விரிக்3க3மே கலியுகே3
ஸம்வத்ஸரேது3ர்மதௌ
ப4ாநௌ வ்ருஸ்சிகப4ாஜி பஞ்சமதி3நே
தாரே பு3த4ஸ்யோத்தமே ।
ரோஹிண்யா ஸஹிதே லஸத்யுடு3பதௌ
க்ருஷ்ணே த்3விதீயே திதௌ2
ஸஞ்ஜஜ்ஞே முநிவாஹநஸ்சரணயோர்
யோ ரங்கி3ணோSந்தர்த3தே4 ।।

திருப்பாணாழ்வார் திருவவதாரக்ரமம் இருக்கும் படி எங்ஙனேயென்னில்:- "காவேரீதோயமாஸ்ரித்ய வாதோ யத்ர ப்ரவர்த்ததே – தத்3தே3ஶவாஸிநாம் முக்தி: கிமு தத்தீரவாஸிநாம்" என்று சொல்லுகிற படியே ஸ்வப்ரவாஹஸ்பர்ஶமருத்ஸம்ப3ந்த4த்தாலே முக்திதரவல்ல நீர்மையையுடைத்தான திருக்காவேரிக் கரையிலே நிசுளாபுரி என்று சொல்லப்பட்டதாய்

மாடகூடப்ராஸாதே3ாபஸோபி4தமான உறையூரிலே, ஸூர்யவம்ஸ ப்ரதீ3பனான சோளபூ4பதி த4ர்மமாக ப்ருதி2வீபரிபாலநம் பண்ணாநிற்கச்செய்தே, க்ஷீரார்ணவராஜனிடத்தே பிராட்டி ப்ராது3ர்ப்3ப4வித்தருளினாப்போலே நம்பெருமாளிடத்தே ஏகாக்3ர சித்தனான த4ர்மவர்மாவாகிற சோளனுக்குக்கந்யகையாய் நீளாம்ஸஜையான உறையூர்நாச்சியார் திருவவதரித்தருள, சோளராஜாவும், ஸ்ரீஜநகராஜன் பிராட்டியை ப்ரீதியோடே எடுத்து வளர்த்தாப்போலே உவப்போடே வளர்க்க வளர்ந்தருளுகிற நாச்சியார், பா3லக்ரீடை3யிலும் நம்பெருமாளையல்லது வேறொரு விளையாட்டறியாதவளாய் ஸகி2களோடே கூடி விஹரித்து வளர்ந்தவள், ப்ராப்தயௌவநையான பின்பு, ஒருநாள் உத்3யாநவநத்திலே ஸகி2களோடே கூட டே3ாலாலீலையாய் விஹரியாநிற்க "வேட்டையாடிவருவானை விருந்தாவனத்தே கண்டோமே" (நாச்.திரு.14–9) என்கிறபடியே நம்பெருமாள் அங்கே ம்ருக3யாவிஹாரபரராயெழுந்தருள, கண்டு மையலேறி மோஹித்து ஊரேவந்து, ஸ்வபிதாவான சோளராஜாவைக் குறித்து 'நம்பெருமாளையல்லது வேறொரு புருஷனுக்கு வாழ்க்கைப்படேன் என்னை அவருக்கே உத3கம்பண்ணிக் கொடும்' என்ன, சோளராஜாவும் அதிஸந்துஷ்டனாய் நம்பெருமாள் ஸந்நிதி4யிலே சென்று அச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'நாமே பாணிக்3ரஹணம் பண்ணுகிறோம்; நமக்கே உத3கம் பண்ணிக்கொடும்'

என்று நியமிக்க ராஜாவும் ஸந்துஷ்டனாய்த் *துமிலமெழப் பறைகொட்டித் தோரணம்நாட்டி (பெரியாழ்.திரு. 3-8-3) அரங்கமாநகரை அலங்கரித்துப் பெரிய ப்ரீதியுடனே *பெருப்பெருத்த கண்ணாலஞ்செய்து (பெரியாழ்.திரு.3-7-10) நாய்ச்சியாரை உத3கம்பண்ணிக்கொடுக்க, பெருமாளும் ஜநகராஜன் திருமகளை உத்3வாஹம் பண்ணினாப்போலே உவப்போடே திருமணம்புணர, ராஜாவும் பொன்னரிசி முந்நூற்றறுபது ப4ாரமும், அதுக்குத்தக்க முத்துமாணிக்கமயமான நவரத்நோ-பஹாரமும், நிரவதி4கவஸ்த்ராப4ரணங்களும் கோ3க3ஜாஸ்வ தா3ஸீவர்க்3க3ங்களும் குறைவறக் கொடுத்தும், ஸர்வத்திலும் பர்யாப்தி பிறவாமையாலே தன் ஸர்வஸ்வத்தையும் நம்பெருமாளுக்கே ஸமர்ப்பித்து வாழுங்காலத்திலே, 'உறந்தை' என்கிற அந்த உறையூரிலே கார்த்திகை மாஸத்தில் ரோஹிணீ நக்ஷத்ரத்திலே "குலந்தாங்குசாதிகள் நாலிலும் கீழி-ழிந்து" என்று சொல்லப்பட்ட பஞ்சமவர்ணத்திலே ப்3ராஹ்மணவேள்விக்குறை முடித்த ப4ாக3வதரைப் போலே ஸ்ரீவத்ஸாம்ஸராகத் திருப்பாணாழ்வார் அவதரித்தருளினார். 'அத2 தத்ர குலேSந்திமே ரமா ரமணோரஸ்ஸ்தி2தலாஞ்சநாம்ஸஜ: । ஸமஜாயத காணஸம்ஜ்ஞகஸ்ஸுகவி: கார்த்திகமாஸி வைத4பே4" என்று தி3வ்யஸூரிசரிதத்திலே சொல்லிற்றிறே.

"ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந்

மது4ஸூதெ3ந: ஸாத்விகஸ்ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த2 சிந்தக:''(ப4ார.ஶாந்தி 358–73) என்கிறபடியே எம்பெருமான் இவர்க்கு ஜாயமாநகடாக்ஷத்தைப் பண்ணுகையாலே கேவலஸத்த்வகு3ணப்ரசுரராய், *சேமமுடை நாரத(பெரியாழ்.திரு.4–9–5)ரைப்போலேவும், "நிக்3ரஹாந் தாரயாஸ் மாத்3வை தேந கீ3தப2லேந மாம் । ஏவமுக்த்வா து சண்டா3ளம் ராக்ஷஸஶ் ஶரணங்க3த:'' என்கிறபடியே ஶரணாக3தனை ப்3ரஹ்மரக்ஷஸ்ஸைக் குறித்து "யந்மயா பஶ்சிமம் கீ3தம் ஸ்வரம் கைஶிகமுத்தமம் । ப2லேந தஸ்ய ப4த்3ரம் தே மோக்ஷயிஷ்யாமி கில்பி3ஷாத்'' என்று கைஶிக புராணத்தில் யாக3தே3ாஷம் பரிஹரித்த ப4ாக3வதரைப் போலவும் ப4க3வத்3க3ாநவித்3யைக்கு ஸார்வபெ4ளமராய் *பரமாத்மனைச் சூழ்ந்திருந்து (திருப்பல்–12) ஸாமக3ாநம் பண்ணும் நித்யஸூரிகளிலேயொருவர் வந்தவதரித்தாரோவென்று சொல்லலாம்படியான தி3வ்யசரிதங்களையுடையராய், மோக்ஷார்த்தி2யான இப்பாண்பெருமாள், ஸ்வவர்ணாநுகூலமாக இரண்டாற்றுக்கும் நடுவே தாம் மிதியாமே தென்னாற்றின் தென்கரையிலே திருமுகத்துறைக்கெதிரே "தொழுமத்திசையுற்று நோக்கியே'' (திருவாய்.6–5–5)என்கிறபடியே *திருவரங்கமேயான் திசை (முதல்.திருவ–6)யை நோக்கி தூ3ரநின்று *வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்றுள் கலந்து (திருவாய்.3–1–9) வீணையும்

கையுமாய்த் *திருப்புகழ்கள் பலவும் பாடி(பெருமாள். திரு.1–9)க்கொண்டு "சிந்திக்கும் திசைக்கும் தேறும் கைகூப்பும்" (திருவாய்.7–2–5) என்கிறபடியே பெரியபெருமாளை அநவரதப$_4$ாவனை பண்ணிப் போருகையாலே "ததோ மே தத்$_3$க$_3$தம் மந:" என்கிறபடியே பெரியபெருமாளும் இவர்பக்கல் *உவந்த திருவுள்ளத்தராக, அவ்வளவிலே 'நாச்சியாரும் பெருமாளுடனே 'நமக்கு அந்தரங்க$_3$ரான இப்பாண்பெருமாள் புறம்பேநிற்கப் பெறுமோ?' என்று விண்ணப்பஞ்செய்ய, பெரிய பெருமாளும் இவரைப்பலகால் அருள்பாடிட்டுப் போகவிட்ட விடத்திலும் இவர் ஸ்வருபத்தால்வந்த நைச்யத்தாலும், ஸ்வவர்ணத்தால்வந்த நைச்யத்தாலும் பிற்காலித்துக் கடுநடையிட்டு அகல்கிற வளவிலே பெரியபெருமாள் பின்னையும் இவர் பக்கலுள்ள க்ருபாதிஶயத்தாலும், தன் நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யத்தாலும் ஸ்ரீலோகஸாரங்க$_3$ மஹாமுநீந்த்$_3$ரரைப் பார்த்து 'நமக்கு அந்தரங்க$_3$ரான பாண்பெருமாளை நீர் நெகிழ நினையாதே அவரை உம்முடைய தோளிலேகொண்டு நம்பக்கல் அழைத்துக் கொண்டுவாரும்' என்று ஸ்வப்நமுகே$_2$ந நியமித்தருள, அவரும் விடிவோரை எழுந்திருந்து "அத்$_3$ய மே ஸப$_2$லம் ஜந்ம ஸுப்ரபா$_4$தா ச மே நிஶா" (பார.5–17–3)என்கிறபடியே 'இற்றைவிடிவு எனக்கு நல்விடிவாச்சுது' என்று ஸ்வப்நத்தை நிஶ்சயித்து மிகவும் ஹ்ருஷ்டராய் *தோதவத்தித் தூய்மறையோ (பெரியாழ்.திரு.4–8–1)ருடனே திருமுகத்துறையிலே

*நாட்காலேநீராடி(திருப்பாவை–2) நித்யாநுஷ்ட$_2$ாநம் செய்தருளி, "ஸுதூ$_3$ரமபி க$_3$ந்தவ்யம் யத்ர ப$_4$ாக$_3$வதஸ்ஸ்தி$_2$த:" என்கையாலே, இவ்வாழ்வார் அதிதூ$_3$ரத்திலே நின்று *யாழினிசை வண்டினங்கள் ஆளம் வைக்குமரங்க((பெரியாழ்.திரு.4–8–6))த்தை நோக்கி நித்யமாக ஸேவித்து ஸ்தோத்ரம் பண்ணிக் கொண்டு நிற்கிறவிடத்தேற எழுந்தருளி, இப்பாண் பெருமாள் திருவடிகளிலே தாளும் தடக்கையும்கூப்பி தண்டம் ஸமர்ப்பித்து 'நம்பெருமாள் தேவரீரை எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு வரவேணு மென்று அடியேனை நியமித்தருளினர்" என்று விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வாரும் "குலந்தாங்கு சாதிகள் நாலிலுங்கீழிழிந்து"(திருவாய்.3–7–9) என்றும், "குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்"(திருச்சந்த.90) என்றும், "நீசனேன் நிறைவொன்றுமிலேன்"(திருவாய்.3–3–4) என்றும் சொல்லுகிறபடியே ஸ்வநைச்யத்தை முன்னிட்டுப் பிற்காலித்துத் *திருவரங்கப் பெருநக(பெருமாள்.திரு 1)ரை நான் மிதிப்பேனோ? என்ன, ஸ்ரீலோகஸாரங்க மஹாமுநிகளும் 'ஆகில் அடியேனுடைய தோளின் மேலே எழுந்தருளும்; பெருமாள் அருள்பாடிட்டரு ருளினபடியே எழுந்தருளுவித்துக்கொண்டு போகிறேன்' என்ன ஆழ்வாரும் "செய்த்தலையெழு நாற்றுப் போல் அவன் செய்வன செய்து கொள்ள" (பெரியாழ்.திரு 3–7–9) என்கிறபடியே *அவன்செய்யும் சேமத்தை எண்ணித் தெளிவுற்று

(திருவாய்.7–5–10)ந்யஸ்தப₄ரராய் நிற்க, ஸ்ரீலோக ஸாரங்க₃ மஹா முநீந்த்₃ரரும் முக்தனுய்ப் போமவனே ஆதிவாஹிகர் எழுந்தருளுவித்துக்கொண்டு திருமாமணி மண்டபத்தேறப் போமாப்போலே ஆழ்வாரைத் தம் திருத்தோளின் மேலே எழுந்தருளுவித்துக்கொண்டு, அழகியமணவாளன் திருமண்டபத்துக்கு அவ்வருகே புகுர, பெரியபெருமாளும் தம்முடைய தி₃வ்யமங்கள விக்₃ரஹத்தை நித்யத₃ரித்₃ரனுக்கு நிதி₄ காட்டுவாரைப் போலே இவருக்குக் காட்டிக்கொடுக்க "கிரீட கேயூரகரத்₃நகுண்ட₃லப்ரலம்ப₃ முக்தாமணிஹார பூ₄ஷிதம்। விஶாலவக்ஷஸ்த₂ல ஶோபி₄கௌஸ்துப₄ம் ஶ்ரியா ச தே₃வ்யாத்₄யுஷிதோரு வக்ஷஸம் । ப்ரதப்தசாமீகரசாருவாஸஸம் ஸுலேகா நூபுர ஶோபி₄தாங்₄ரிகம் । ஸுவர்த்துநீஜாதம்ருணுள கோமளம் த₃த₄நமச்ச₂ச்ச₂வியஜ்ஞஸூத்ரகம் । பு₄ஜோபத₄நம் ப்ரஸ்ருதாங்யஹஸ்தகம் நிகுஞ்சி- தோத்தாநிதபாத₃யுக்₃மம் । ஸுதீர்க்கமுத்₃பாஹு- முதா₃த்₃ரவேஷம் பு₄ஜங்க₃தல்பம் புருஷம் த₃த₃ர்ஶ" (ஹஸ்திகிரி மாஹாத்ம்யம்)என்று சொல்லுகிறபடியே பூ₄ரஹ்மாதி₃ஸகல சேதநராலும் ஸேவ்யமாநரான *அரங்கத்தரவணைப் பள்ளியானே(பெரியாழ்.திரு.4–1–1) ஸேவிக்கப் புகுந்த ஆழ்வார் மாதாவினுடைய ஸர்வாவயவங்களும் கிடக்கச்செய்தே ஸ்தநந்த₄ய ப்ரஜை முலேயிலே வாய் வைக்குமாபோலே ஶேஷிபக்கல் ஶேஷபூ₄தன் இழியுந்துறை

திருவடிகளாகையாலே "அரங்கத்தம்மான் திருக்கமல பாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றதே" (அமலன்–1) என்கிறபடியே ஶேஷித்வபே$_4$ாக்$_3$யத் வோபாயத்வங்கள் குறைவற்ற திருவடிகளையிறே முந்துறப் பற்றிற்று; "அரங்கத்தம்மான்" என்கையாலே ஶேஷித்வமும், "கமலம்" என்கையாலே பே$_4$ாக்$_3$யத்வமும், "பாதம்" என்கையாலே உபாயத்வமும் சொல்லிற்று; பெரியாழ்வாரும் இப்படியிருந்துள்ள திருவடித்தாமரைகள் முதலாகத் *திருப்பாதகேசத்தை விருப்பாலுரைத் (பெரியாழ். திரு.1–2–21)தநுப$_4$வித்தாப்போலே இவரும் இருளகற்று மெரிகதிரோன் மண்டலத்தூடேற்றி வைத்து ஏணி வாங்கி அருள்கொடுத்திட்டடியவரை ஆட்கொள்வா(பெரியாழ்.திரு.4–9–3)னை பெரிய பெருமாளுடைய தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹத்தை பாத$_3$ாதி$_3$கேஶாந்தமாக அநுப$_4$வித்து அவ்வநுப$_4$வ ஜநிதப்ரீத்யதிஶயத்தாலே தாம் பத்தும் பத்தாக அநுப$_4$வித்தபடிக்கு "அமலனாதிபிரான்" என்கிற தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$த்தை பிற்பாடரும் அநுஸந்தி$_4$த்து உஜ்ஜீவிக்கும்படி உபகரித்தருளி லோகத்தை வாழ்வித்தருளி மிகவும் உகப்போடே நிற்க, பெரியபெருமாளும் வேர்சூடுமவர்கள் மண் பற்றுக் கழற்றுதாப்போலே அத்திருமேனியோடே அங்கீ$_3$கரித்தருள, ஆழ்வாரும் அகி$_2$லரும் காணும்படி *அணியரங்கன்(அமலன்–10)திருவடிகளிலே அந்தர்ப$_4$வித் தருளினர்.

திருப்பாணாழ்வார் வைப$_4$வம் நிறைவுபெற்றது

ஸ்ரீ:
ஆழ்வார்எம்பெருமானார்ஜீயர் திருவடிகளே
ஶரணம்

## பெரியவாச்சான்பிள்ளை வைப$_4$வம்

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோயாமுநஸூநவே
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப$_4$ஃஸ்ரீத$_4$ரஸ்ஸதா$_3$॥

'ஸ்ரீக்ருஷ்ணர்' என்னும் இயற்பெயரையுடைய பெரியவாச்சான்பிள்ளை சோழமண்டலத்தில் சங்கநல்லூரில் ஸர்வஜித் என்கிற ஸம்வத்ஸரத்திலே ஆவணி மாஸம் க்ருஷ்ணாஷ்டமீ ரோஹிணீயன்று ஸ்ரீக்ருஷ்ணனுடைய அம்ஶமாய் பூர்வஶிக$_2$ ஸ்ரீவைஷ்ணவகுலத்திலே யாமுநதே$_3$ஶிகருக்கும், நாச்சியாரம்மங்காருக்கும் திருக்குமாரராகத் திருவவதரித்தருளினர். பெரியதிருமுடியடைவில் இவருக்கு "ஆசார்யர் நம்பிள்ளை, திருவாராத$_4$நம் க்ருஷ்ண விக்$_3$ரஹம், இருப்பிடம் கோயில், இவர் செய்தருளின க்$_3$ரந்த$_2$ங்கள் திருவாய்மொழி வ்யாக்$_2$யாநம் இருபத்து நாலாயிரப்படி, மற்ற ப்ரப$_3$ந்த$_4$ங்களுக்கு வ்யாக்$_2$யாநங்கள், பரந்தரஹஸ்ய விவரணம், மாணிக்கமாலை, நவரத்நமாலை, ஸகலப்ரமாணதாத்பர்யம், உபகாரரத்நம், க$_3$த்$_3$யத்ரய வ்யாக்$_2$யாநம், ஆளவந்தார் ஸ்தோத்ரவ்யாக்$_2$யாநம், அப$_4$யப்ரதா$_3$நவ்யாக்$_2$யாநம், சரமரஹஸ்யம், அநுஸந்த$_4$ாந ரஹஸ்யம், நிகமனப்படி." என்று கூறப்பட்டுள்ளது.

திருமழிசை அண்ணவப்பங்கார்ஸ்வாமி தம்முடைய பழநடைவிளக்கத்தில் "விஶிஷ்டாத்₃வைத ஸித்₃தா₄ந்தத்திலேயிருந்து ஸ்ரீவைஷ்ணவர்களாயிருக்குமவர்களுக்குத் திருப்பல்லாண்டு முதலான தி₃வ்யப்ரப₃ந்த₄மொழிய வேறு க₃தியில்லை. பூர்வாசார்யஸம்ப்ரதா₃யபரம்பரையாலே வந்த தி₃வ்யப்ரப₃ந்த₄ தாத்பர்யங்களையறிகைக்குப் பெரியவாச்சான்பிள்ளை செய்தருளின வ்யாக்₂யாநங்களையொழிய வேறு க₃தியில்லை. ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் பெரியவாச்சான்பிள்ளை ஸம்ப₃ந்த₄ம் பெற்று அவருக்கு ஶிஷ்யகோடியாயிருப்பர்கள்" என்றருளிச் செய்துள்ளார்.

**பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்கும்**
**தெரியவியாக்கியைகள் செய்வால் – அரிய**
**அருளிச்செயற்பொருளை ஆரியர்கட்கிப்போ**
**தருளிச்செயலாய்த் தறிந்து (உபதேசரத்தினமாலை–46)**

என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்தபடியே அருளிச்செயலின் அதிது₃ர்க்₃ரஹமான அர்த்த₂ங்களை பின்புள்ளாரனைவரும் பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்₂யாந விஶேஷங்களாலே நன்குணர்ந்து, இன்றளவும் ஆசார்யபத₃ம் நிர்வஹிக்கிறார்கள்.

வடக்குத்திருவீதிப்பிள்ளையைப் போலல்லாமல் 'நம்பிள்ளை தம்முடைய நல்லருளால் ஏவியிட' என்று

ஆசார்ய நியமநமடியாக வ்யாக்₂யாநங்கள் அருளினமை இவருக்கு ஏற்றமாகும். இவரொருவரே நாலாயிரதி₃வ்யப்ரப₃ந்த₄ம் முழுவதற்கும் வ்யாக்₂யாநம் அருளிச்செய்தார். "ஶட₂கோபவாங்மயமான திருவாய்மொழியொழிந்த திருப்பல்லாண்டு தொடங்கித் திருமடல்களீறாகவுண்டான தி₃வ்யப்ரப₃ந்த₄ங்கள் இருபத்துமூன்றுக்கும் தம்முடைய பரமகருணையை ப்ரயோஜநதயாலே ஸுஸ்பஷ்டமாம்படி வ்யாக்₂யாநம் செய்தருளினர்" என்று பிள்ளைலோகம் ஜீயர், உபதேசரத்தினமாலை (46) வ்யாக்₂யாநத்திலே அருளிச்செய்துள்ளார்.

அத்₃வைதியான அப்பையதீ₃க்ஷிதரிடத்திலே சிலர் ஸ்ரீராமாயணத்துக்கு ஒரு வ்யாக்₂யாநம் செய்யும்படி வேண்ட, அதற்கு அவர் 'சோழியன் உமிழ்ந்த சக்கை தான் உளது' என்றாராம். அதாவது, பெரியவாச்சான்பிள்ளை தமது தனிஸ்லோக வ்யாக்₂யாநத்திலே ஸ்ரீராமாயணத்தின் ஸாரார்த்த₂ங்களை விஶத₃மமாக அருளிச்செய்துவிட்டபடியால் இனி ஸ்ரீராமாயணத்தில் நான் கூறுவதற்கு என்ன இருக்கிறது என்றாராம்.

ஸம்ஸ்க்ருதவேத₃த்திற்கு ப₄ட்டப₄ாஸ்கரர் முதலானோர் பரக்க ப₄ாஷ்யங்களை எழுதி வைத்திருந்தாலும் அவை த்₃ராவிட₃வேத₃த்திற்குப் பெரிய வாச்சான்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்₂யாநங்களுக்கு முன்பு இரவிக்கெதிர் மின்மினி போலேயாகும்.

இவருடைய ப்ரப₄ாவத்தைப்பற்றி 'பெரியவாச்சான்பிள்ளை ப்ரப₄ாவப்ரகாஶிகை' என்ற நூலில் ஸுத₃ர்ஶன ஸ்தாபகர் ஸ்ரீ.உ.வே. கி.

ஸ்ரீநிவாஸ அய்யங்கார் ஸ்வாமி எழுதியதிலிருந்து ஒரு பகுதியை அடுத்தபடியாகக்கொடுத்து நிறைவுபடுத்துகிறோம்.

பெரியபெருமாள் ப்ரப4ாவத்தைப் பேசிமுடித்-தாலும் முடிக்கலாம்; பெரியவாச்சான்பிள்ளை ப்ரப4ாவத்தைப் பேசி முடியாதென்பர் பெரியோர். ''ஆழ்வார்கள் எல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார்'' என்றார் பிள்ளைலோகாசார்யர். ''ஆசார்யர்கள் எல்லாரையும் போலல்லர் பெரியவாச்சான்பிள்ளை'' என்பர் பெரியோர்.

இவருக்கு அப4யப்ரத3ராஜர் என்னும் சிறப்புப் பெயர் இவருடைய வியாக்2யாநங்களைச் செவிசாற்றின ஸ்ரீரங்கநாதனால் அளிக்கப்பட்டது. ஸ்ரீராமாயண விஶேஷார்த்த2ங்களை தனிஸ்லோக வ்யாக்2யாநமாகவும், ராமசரமஸ்லோக வ்யாக்2யாந மான அப4யப்ரத3ாந ஸாரமாகவும், தி3வ்யப்ரப3ந்த4 வ்யாக்2யாநங்களில் பல ஸ்லோகங்களை எடுத்து விவரணம் செய்வதன்மூலமும் வெளியிட்டு, ஸ்ரீராமாயணப்பெருக்கர் என்று ப்ரஸித்3தி4பெற்றார். பெரியபெருமாள், பெரியாழ்வார், பெரியவாச்சான் பிள்ளை, பெரியஜீயர் என்று சொல்லப்பட்ட நால்வரும் அவரவர் பெருமையால் 'பெரிய' என்கிற பட்டம் அடைந்து புகழப்பட்டிருக்கிறார்கள். இம்மஹாசார்யரின் மஹிமையையுணர்ந்த முன்னோர்கள் ''வ்யாஸோ வல்மீகஜந்மா வா க3ருட3: க்ருஷ்ண ஏவ வா பு3தை4ரிதி விதர்க்யாய ஸ்ரீக்ருஷ்ணயாஸ்து மங்க3ளம்॥'' (இவர் வ்யாஸரோ? வால்மீகியோ?

க$_3$ருட$_3$னோ? க்ருஷ்ணன் தானேயோ? என்று ஞ்ஞானிகளால் எண்ணப்படுகிற ஸ்ரீக்ருஷ்ணஸூரிக்கு மங்க$_3$ளமுண்டாகக்கடவது) என்று மொழிந்திருக்கிறார்கள். வடமொழி வேத$_3$ங்களைப் பிரித்தெடுத்துச் சிக்கறுத்து ஸூத்ரங்களாலே அவற்றின் பொருளை விவரித்த க்ருஷ்ண த்$_3$வைபாயனரே தமிழ் வேத$_3$ப்பொருளை விவரிக்க ஸ்ரீகிருஷ்ணஸூரியாய் அவதரித்தாரோ? அல்லது ஆதி$_3$காவ்யமாகவும் வேதோ$_3$பப்$_3$ரும்ஹணமாகவும் விளங்கும் ஸ்ரீராமாயணத்தைப் பாடின வால்மீகியே தம்முடைய ஹ்ருத$_3$யத்திலிருந்த அர்த்த$_2$ங்களை வெளிப்படுத்த அப$_4$யப்ரத$_3$ராஜராக அவதரித்தாரோ, அல்லது வேத$_3$ஸ்வரூபவிஹங்க$_3$ராஜரான பெரியதிருவடியே மறைப்பொருளை மாண்புறச் செய்யப் பெரியவாச்சான்பிள்ளையாக அவதரித்தாரோ, அல்லது பூர்ணாவதாரமான ஸ்ரீக்ருஷ்ணப$_4$க$_3$வானே உபநிஷத்துக்களாகிற க்ஷீராப்$_3$தி$_4$யைக்கடைந்து கீதாம்ருதத்தைக் கொடுத்துதவினதுபோல், சரமஶ்லோகார்த்த$_2$ வ்யாக்$_2$யாநம் செய்து ப்ரபத்தியின் பெருமையைப்பேசியும், ஆழ்வார்களின் அருளிச்-செயல்களாகிற அமுதக் கடலைக் கடைந்து, தமிழ்வேத$_3$ பா$_4$ஷ்யங்களாகிற ஆராவமுதத்தை அவனிக்களித்தும் உய்வுபெறுகைக்காகத் தன் ஜந்மதி$_3$நமாகிய ஸ்ரீஜயந்தி–யிலே 'க்ருஷ்ணன்' என்னும் திருநாமத்துடனேயே திருவவதரித்தானோ என்று பு$_3$த்$_3$தி$_4$மான்கள் எண்ணியெண்ணி . அவருக்கு மங்க$_3$ளாஶாஸநம் செய்வர்கள்.

பெரியவாச்சான்பிள்ளை வைப$_4$வம் முற்றிற்று.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## அழகியமணவாளப்பெருமாள் நாயனார் வைப4வம்

த்3ராவிட3ாம்நாயஹ்ருத3யம் கு3ருபர்வக்ரமாக3தம் ।
ரம்யஜாமாத்ருதே3வேந த3ர்ஶிதம் க்ருஷ்ணஸூநுநா ॥

(ஆசார்யபரம்பராப்ராப்தமான த்3ராவிடவேத3 ஹ்ருத3யம் (ஆசார்யஹ்ருதயம்), ஸ்ரீக்ருஷ்ணர் என்கிற வடக்குத் திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனாராலே காட்டப்பட்டது)

ஆழ்வாருடைய அவதாரமென்னலாம்படியான வைப4வத்தையுடைய நம்பிள்ளை, ஒருநாள் நித்யப்படி காலக்ஷேபம் நிறைவேறி, மத்4யாஹ்ந காலத்திலே தனியே எழுந்தருளியிருக்க, திருவடிகள் ஸம்ப3ந்தி4யான வடக்குத் திருவீதிப்பிள்ளை திருத்தாயாராகிற அம்மி தண்டன் ஸமர்ப்பித்துநிற்க, அவளைக்கடாக்ஷித்தருளி "உம்முடைய க்3ருஹ யோக3க்ஷேமங்கள் என்?" என்று கேட்டருள, "என்ன விண்ணப்பஞ்செய்யப் போகிறேன்? ஒரு பேய்ப்பிள்ளையாயிருக்கிறதே" என்ன, "அதெப்படி?" என்ன, "ஒரு பெண்ணை விவாஹஞ் செய்வித்தீரே; அந்தப் பெண் பெரியவளானாள்; ஸஹஶயந கல்யாணம் பாலேபண்ணி ஶயிக்கவிட, உடனே பிள்ளை முறையிட, 'அதென்?' என்று எல்லாரும்

XV

உள்ளேபுக, உடம்பெல்லாம் புழுக்க நீர் சொரிய விம்மியழுதுநிற்க, ''இதேது பிள்ளாய்?'' என்று கேட்டேன்; ''அம்மா இதுவொரு ஆடுகிற பாம்பாய் இருந்தது; ப$_4$யப்பட்டேன்; இன்னுமப் படியேயிருக்கிறது'' என்ன, ''இதுவுமொரு புதுமையோ'' என்று பெண்ணை அப்பாலே போகவிட்டேன். இன்னுமொருநாள் அந்தப் படியே ஆச்சுது'' என்று வ்யாகுலப்பட, பிள்ளையும் சிரித்தருளி, ''அதற்கு உனக்கென்?'' என்ன, ''இப்படி அருளிச்செய்யுமோ? பெண் வாழ வேண்டாவோ? வம்ஶத்துக்குப்பிள்ளை வேண்டாவோ?'' என்று திருவடிகளிலே விழுந்து ஶோகிக்க, பிள்ளையும், ''அம்மீ! எழுந்திரு. நீ ஶோகிக்கவேண்டா; மணாட்டுப் பெண் ருதுஸ்நாதையாய் வருகிறபோது இது வழியாயழைத்து வா'' என்று அருளிச்செய்துவிட அவளும் அப்படியே அழைத்து வந்துவிட, திருவோலக்கத்திலே பிள்ளையும் அந்தப்பெண்ணைக் கிட்டவழைத்தருளி அவள் வயிற்றைத் தம் திருக்கைகளாலே ஸ்பர்ஶித்து, ''நம்மைப் போல் இருப்பானொரு பிள்ளையைப் பெறக்கடவாய்'' என்று ஆஶீர்வாதம் பண்ணிவிட்டு, அற்றை ஞாயிறுபாடு வடக்குத்திருவீதிப்பிள்ளையை அழைத்தருளி, ''உம்முடைய ப$_4$யமுந்தீர்ந்தது, விஹிதவிஷய வைராக்$_3$யத்திற்குங் குறைவுவராது; ஆனால் லோகமர்யாதைக்கு நாம் சொன்னதற்காக இன்றிராக்கூடியிரும்' என்றருளிச்செய்ய, அப்படியே

கூடியிருந்தவளவில் ஆச்சியுங் க$_3$ர்ப$_4$ந்த$_4$ரித்து லோகவிலக்ஷணமாய் “ததஶ்ச த்$_3$வாத$_3$ஶே மாஸே” என்கிறபடியே பன்னிரண்டாம் மாஸத்திலே ஐப்பசியில் திருவோணநக்ஷத்திரத்திலே பிள்ளை திருவவதரிக்க, அவருக்குப் பன்னிரண்டாம் நாள் நாமகரணத்திலே “லோகாசார்யர் பிள்ளை” என்று நம்பிள்ளையுடைய திருநாமஞ்சாத்தி வளர்ந்து வந்து அப்$_3$த$_3$பூர்த்தி உத்ஸவத்திற்குப் பெருமாளை ஸேவிப்பிக்கத்தக்கதாக நம்பிள்ளை முதலான பெரியோர்களெல்லாரும் மங்க$_3$ள வாத்யங்களுடனே திருப்பல்லக்கிலே எழுந்தருளப் பண்ணுவித்துக் கொண்டு சென்று ஸேவிக்க, நம்பெருமாளும் போர உகந்தருளித் தீர்த்த$_2$ம், ஸ்ரீஶட$_2$கோபன், சந்த$_3$னம், ஸுக$_3$ந்த$_4$ம், திருமாலை ப்ரஸாத$_3$ங்களும் பட்டுச்சிற்றுடையும் ப்ரஸாதி$_3$த்-தருளி, நம்பிள்ளையை, அர்ச்சகமுகே$_2$ந “உம்மைப் போலேயொரு பிள்ளை கொடுத்தீரே; இனி நம்மைப் போலேயொரு பிள்ளை கொடும்” என்று நியமிக்க “நாயன்தே நாயன்தே” என்று ஓமறைய, அப்படியே அழகியமணவாளப்பெருமாள் நாயனர் திருவவதாரஞ் செய்தருளினர்.

அழகியமணவாளப்பெருமாள் நாயனருக்குத் திருவவதாரஸ்த$_2$லம் கோயில், இருப்பிடம் கோயில். குலம் வடமாள். குடி முடும்பை. ஸ்ரீவத்ஸகோ$_3$த்ரம், யஜுஶ்ஶாகை, ஆபஸ்தம்ப$_3$ஸூத்ரம், திருநக்ஷத்ரம் மார்கழி மாஸம் அவிட்டம். பஞ்சஸம்ஸ்காரங்களை

**XVII**

ஸாதித்தருளினவர் திருத்தகப்பனாரான வடக்குத் திருவீதிப்பிள்ளை. ஸ்ரீப₄ாஷ்யாதி₃ க்₃ரந்த₂ங்களும், ரஹஸ்யங்களும் ஸாதித்தருளின ஆசார்யர் நம்பிள்ளை. திருவாய்மொழிமுதலான தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை ஸாதித்தருளின ஆசார்யர் திருத்தமையனாரான பிள்ளைலோகாசார்யர். இவர் அருளிச்செய்த க்₃ரந்த₂ங்கள் ஆசார்யஹ்ருத₃யம், திருப்பாவைக்கு வ்யாக்₂யாநம் ஆறாயிரம், அமலனதி பிரான் வ்யாக்₂யாநம், கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்₂யாநம், திருவந்தாதிகளுக்கு வ்யாக்₂யாநம், அருளிச்செயல் ரஹஸ்யம் ஆகியனவாம். இத்தை நினைத்திறே 'தம் சீரால் வையகுருவின் தம்பி ... செய்யமவை தாமும் சில' (உபதேசரத்தினமாலை–47) என்று ஜீயரும் அநுஸந்தி₄த்தருளினர். இவர் சிஷ்யர் கூரகுலோத்தமதா₃ஸர்.

நம்பிள்ளையுடைய அநுக்₃ரஹத்தாலே அவதார விஶேஷமாய்த் திருவவதரித்திருந்துள்ள பிள்ளைலோகாசார்யரும், அவருடைய அருளே த₃ாரகமாய் வளர்ந்த அவர்திருத்தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள் நாயனாரும் ப₄ால்யாத் ப்ரப்₄ருதி ஸுஸ்நிக்₃தராய் இணைத்தொட்டிலிட்டு வளர்ந்த இளையபெருமாளையும் பெருமாளையும் போலவும் பலதேவனென்னும் தன்னம்பியோடப் பின்கூடச்செல்வான் (பெரியாழ்.திரு.1-8-5) என்கிற நம்பிமூத்தபிரானையும் க்ருஷ்ணனையும்போலவும் 'தம்பியுடன் தாசரதியானனுஞ் சங்கவண்ண

நம்பியுடன் பின்னடைந்து வந்தானும்– பொங்குபுனல் ஒங்குமூடும்பை உலகாரியனும் அறந் தாங்கு மணவாளனுமேதான்' என்னும்படி ஸௌப்₄ராத்ருத் வத்தை உடையவர்களாய் எழுந்தருளியிருந்தனர். அநந்தரம் நாயனுரும் "வாக்₃பூ₄ஷணம் வகுளபூ₄ஷண ஶாஸ்த்ரஸாரம்'' என்னும்படியான ஸ்ரீவசநபூ₄ஷண ஸ்த₂ாபநார்த்தமாக ஆசார்யஹ்ருத₃யத்தை அருளிச் செய்தார். நாயனுரும், ஸ்ரீவசநபூ₄ஷண ஸ்த₂ாபனுர்த்த மாகத்தாம் செய்தருளின ஆசார்யஹ்ருத₃யமாகிற ப்ரப₃ந்த₄த்தை பெருமாள் ஶ்ரோதாவாய் தாம் வக்தாவாக, ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலே சொன்னுப்போலே விண்ணப்பம்செய்ய, நம்பெருமாள் போர உக₃ந்தருளி 'இதுவும் நாம் செய்ததொன்றன்றே' என்றருளிச்செய்து அழகிய மணவாளப்பெருமாள்நாயனுருக்கு திருமாலே முதலான ஸகல வரிசைகளேயும் ப்ரஸாதித்து, ஸர்வபரிஜந பரிச்சதங்களோடே ப்₃ரஹ்மரதம் ப்ரஸாதித்து, உபலாளித்துத் திருமாளிகையிலே போகவிட்டருளினர். இவ்வைப₄வம் கேட்டு பிள்ளேலோகாசார்யரும் 'வளர்த்தனல் பயன் பெற்றேன்' என்று அதிஸந்தோஷத்துடனே ஆலிங்கித்துக் கொண்டருளினர்.

பின்பு பிள்ளேலோகாசாரியரும் நாயனுரும் அதிவிரக்தராய் வாழ்ந்தருளுகிறகாலத்திலே, நாயனுர் சிறிது காலமெழுந்தருளியிருந்து அசிரேண

பரமபத$_3$த்தை ப்ராபித்தருள, பிள்ளையும் ப$_4$ாக$_3$வத விப்லேஷத்தாலே மிகவும் ஶோகார்த்தராய் அவர் திருமுடியைத் தம் மடியிலே வைத்துக் கொண்டு

மாமுடும்பை மன்னுமணவாள வண்ணலொடு
சேமமுடன் வைகுந்தஞ்சென்றக்கால்—மாமென்று
தொட்டுரைத்த சொல்லுந்துயந்தன்னினுழ்பொருளும்
எட்டெழுத்து மிங்குரைப்பாரார்

என்றிப்படியே பலவகையும் புலம்பித் திருமுத்துதிர்த்து முதலிகள் தேற்றத்தேறி நின்று அவருக்கு சரமகைங்கர்யஞ்செய்து திருவத்$_4$யயநமும் நடத்தியருளினர்.

அழகியமணவாளப்பெருமாள் நாயனர்
வைப$_4$வம் முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே ஶரணம்
எம்பெருமானார் திருவடிகளே ஶரணம்
ஜீயர் திருவடிகளே ஶரணம்

மயர்வறமதிநலம் அருளப்பெற்ற திருப்பாணாழ்வார்
அருளிச்செய்த

# அமலனாதிபிரான்

பெரியநம்பிகள் அருளிச்செய்த தனியன்

ஆபாத$_3$சூட$_3$மநுபூ$_4$ய ஹரிம் ஶயாநம்
மத்$_4$யே கவேரது$_3$ஹிதுர் முதி$_3$தாந்தராத்மா ।
அத்$_3$ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணாம்
யோநிஶ்சிகாய மநவை முநிவாஹநம் தம் ॥

பிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்த தனியன் வ்யாக்$_2$யாநம்

அவ.– (ஆபாத$_3$சூட$_3$மித்யாதி$_3$) இதில் "கெருடவாகனனும் நிற்க" (திருமாலை–10) என்றும், "அஞ்சிறைப் புட்பாகனை யான் கண்டது தென்னரங்கத்தே" (பெரியதிரு 5–6–6) என்றும் சொல்லுகிறபடியே பெரியபெருமாளை ஸேவித்து அநுப$_4$வித்த முநிவாஹநரை மநஸ்ஸாலே அநுப$_4$விக்கும்படி சொல்லுகிறது. க$_3$ருட$_3$வாஹநத்வமும், ஶேஷஶாயித்வமும், ஶ்ரிய:பதித்வமுமிறே ஸர்வஶேஷியான ஸர்வாதி$_4$க வஸ்துவுக்கு லக்ஷணம்; இப்படி ஸர்வாதி$_4$க வஸ்துவினுடைய ஸர்வாவயவங்களையும் ஸக்ரமமாக அநுப$_4$வித்தபடி சொல்லுகிறது.

வ்யா.– (ஆபாத$_3$சூட$_3$ம்) "திருப்பாதகேசத்தை" (பெரியாழ்.

திரு 1-2-21). (அநுபூ$_4$ய) அமலனாதிப்பிரானடைவே அநுப$_4$வித்து, (ஹரிம் ஶயாநம்) "ஸ்ரீமாந் ஸுக$_2$ஸுப்த: பரந்தப:" (ரா.ஸு 38-25) என்னும்படியாய்க்கிடக்கை. கிடந்தகிடையிலே உட்குடையசுரர் உயிரெல்லாமுண்ட(திருவாய் 7-2-3)வரிறே. "ஹரதீதி ஹரி:" அநுகூலர் மநஸ்ஸையும் ப்ரதிகூலர் ப்ராணன்களையும் ஹரிக்குமவரென்கிறது. அநுகூலரை த்$_3$ருஷ்டிசித்தாபஹாரம் பண்ணும்படியாயிருக்கை. "கிடந்ததோர் கிடக்கைகண்டு மெங்ஙனம் மறந்து வாழ்கேன்" (திருமாலை-23), "ஏரார்கோலம் திகழக் கிடந்தாய் கண்டேன்"(திருவாய் 5-8-1)என்னும்படி தாபஹரரானவரை. அவர்தாம், ⋆ அரவின்அணை மிசை மேயமாயனா(அமலன்-7)ரான முகில்வண்ண(திருவாய் 7-2-11)ரிறே. இப்படி அநுகூலப்ரதிகூலரக்ஷண ஶிக்ஷணங்களைப் பண்ணுமவரானவரை.

(கவேரது$_3$ஹிதுர் மத்$_4$யே) கவேரகந்யையான காவேரீமத்$_4$யே. *கங்கையிற் புனிதமாய காவிரி நடுவு பாட்டிலே(திருமாலை-23)யிறே படுகாடுகிடக்கிறது. வண்பொன்னி(பெருமாள் திரு.2-3) திரைக்கையாலடிவருட (பெருமாள் திரு.1-1) திருவுள்ளினிதாக வாய்த்துத் திருக்கண்கள் வளருகிறது(பெரியாழ் திரு.4-9-10). இப்படி (கவேரது$_3$ஹிதுர் மத்$_4$யே ஶயாநம் ஹரிம் ஆபாத$_3$சூட$_3$ம்) என்று குடதிசைமுடியை வைத்துக் குணதிசை பாதம்நீட்டி வடதிசை பின்புகாட்டித் தென்திசையிலங்கை நோக்கிக், கடல்நிறக் கடவுளெந்தை அரவணைத்துயிலுமாகண்டு(திருமாலை-19) அநுப$_4$வித்தாரென்கை. (முதி$_3$தாந்தராத்மா) இப்படி அநுப$_4$வித்து ஹ்ருஷ்டமநாவானார்; அகமகிழப்பெற்றார். உவந்த உள்ளத்த(அமலன்-2)ரானார். ஸந்துஷ்டசித்தஸமாஹிதரானார்.

"மகிழ்ந்தது சிந்தை"(இர. திருவ-32) என்னக்கடவதிறே.

இனி அவ்வளவில் நில்லாதே (அத்3ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணாம்) என்னும்படி காணாக்கண்(முதல் திருவ-11)ணையுடையரானார். "அணியரங்க னென்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" (அமலன்-10) என்றாய்த்து இவர் இவ்விஷயத்திலே அஸ்தமிதாந்ய பா4வராயிருப்பது: "ஏததே3வாம்ருதம் த்3ருஷ்ட்வா த்ருப்யந்தி" (சா2ந் 3-6) "அரங்கமா கோயில் கொண்ட கரும்பினைக்கண்டு கொண்டென் கண்ணிணை களிக்குமாறே" (திருமாலை-17); ராமம் மே அநுக3தா த்3ருஷ்டி: - ந த்வா பஶ்யாமி(ரா.அ 42-34)யிறே. ஸௌந்த3ர்யஸாக3ரத்திலே மக்3நரானார்; இவர்க்கு அழகு அஜ்ஞாநத்தை விளைத்ததாய்த்து. அத்3ருஷ்டம் த்3ருஷ்டமாகை யாலே த்3ருஷ்டம் அத்3ருஷ்டமாய்த்து. அன்றிக்கே, "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லா" (திருவாய் 7-10-10) "பா4வோ நாந்யத்ர க3ச்ச2தி" (ரா.உத் 40-15) என்னும்படி பரத்வாதி3க ளாய்த்து பரோக்ஷவிஷயமாகிற தென்னுதல்; "கட்கிலீ" (திருவாய் 7-2-3) என்னும் வடிவையிறே கண்ணால் கண்டநுப4வித்தது. காணாதவையும் கண்டவஸ்துவிலே யுண்டிறே. இப்படி மைப்படி மேனி(திருவிரு-94)யை யநுப4வித்து மற்ற விஷயங்களைக் காணாக்கண்ணாயிருக்குமவரைச் சொல்லுகிறது.

(யோ நிஶ்சிகாய மநவை முநிவாஹநம் தம்) என்று- யாவரொருவர் "கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" (அமலன்-10) என்று அறுதியிட்டார், அப்படிப்பட்ட அந்த முநிவாஹநரை. (மநவை) மநஸ்ஸாலே ப்ரதிபத்தி பண்ணுகிறேனென்றபடி. "அயனலர்கொடு தொழுதேத்த" (பெரிய

திரு 4-2-6) என்னும்படி ஹம்ஸவாஹநனான சதுர்முக2ன் பஹுமுக2மாக அநுப4வித்தாப்போலே முநிவாஹந ரான இவரும் ஏகமுக2மாக இரண்டு கண்ணாலும் கண்டநுப4வித்தார். “கிரீடகேயூரகரத்நகுண்ட3லம் ப்ரலம்ப3முக்தாமணி ஹேமபூ4ஷிதம்। விஶாலவக்ஷஸ்ஸ்த2லஶோபி4 கௌஸ்துப4ம் ஶ்ரியா ச தே3வ்யாऽத்4யுஷிதோரு விக்3ரஹம்॥ ப்ரதப்தசாமீகர சாருவாஸஸம் ஸுமேக2லாநூபுர ஶோபி4தாங்க்4ரிகம்। ஸுவர்த்3து4நீஜாதம்ருணால கோமலம் த3த4ாநமச்ச2ச்ச2வி யஜ்ஞஸூத்ரகம்॥ பு4ஜோபத4ாநம் ப்ரஸ்ருதாந்யஹஸ்தம் நிகுஞ்சிதோத்தாநிதபாத3யுக்3மம்। ஸுதீ3ர்க்க4முர்வம் ஸமுத3க்3ரவேஷம் பு4ஜங்க3தல்பம் புருஷம் த3த3ர்ஶ॥” (ஹஸ்திகி3ரி மாஹாத்ம்யம்) என்று ப்3ரஹ்மாவானவன் அபி4மாநியாகையாலே, முடியே தொடங்கி யநுப4வித்தான்; இவர் அடியாராகையாலே அடியே தொடங்கி அநுப4வித்தார். அவன் கண்டவநந்தரம் விஷயங்களையும் கண்டான். இவர் விஷயங்களைக் கண்டிலர். “திருக்கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன” (அமலன்-1) “கண்டகண்கள் மற்றொன்றி-னைக் காணாவே” (அமலன்-10) என்றார்.

வினையும் கையுமாய் ஸேவிக்கிற இவர்க்கு, சேமமுடை நாரத(பெரியாழ். திரு 4-9-5)னாரும் ஒருவகைக்கு ஒப்பாகார்.

பெரியாழ்வார் அவதாரத்தில் அநுப4வம் இவர்க்கு அர்ச்சாவதாரத்திலே; அவர் பாதக்கமலம் (பெரியாழ் திரு 1-2-1) என்றத்தை, திருக்கமலபாதம்(அமலன்-1) என்றார்; பீதகச்சிற்றாடையொடும்(பெரியாழ் திரு 1-7-3) என்றதை, அரைச்சிவந்தவாடையின் மேல்(அமலன்-2) என்றும், அழகிய

உந்தியை(பெரியாழ் திரு 1-2-8), அயனைப் படைத்ததோரெழிலுந்தி (அமலன்-3) யென்றும், முழந்தாம்பாலார்த்த வுதரத்தை (பெரியாழ் திரு 1-2-9), திருவயிற்றுதரபந்த(அமலன்-4) மென்றும், குருமாமணிப்பூண் குலாவித்திகழும் திருமார்வை(பெரியாழ் திரு 1-2-10), திருவார மார்பு(அமலன்-5) என்றும், அண்டமும் நாடுமடங்க விழுங்கிய கண்டத்தை(பெரியாழ் திரு 1-2-13), முற்றுமுண்டகண்டம் (அமலன்-6) என்றும், நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய கைத்தலத்தை(பெரியாழ் திரு 1-2-12), கையினார் சுரிசங்கனலாழியர்(அமலன்-7) என்றும், செந்தொண்டை வாயை(பெரியாழ் திரு 1-2-14), செய்யவாய் (அமலன்-7) என்றும், கண்களிருந்தவா(பெரியாழ் திரு 1-2-16)வென்றதை, அப்பெரியவாய கண்கள்(அமலன்-8) என்றும், உருவுகரியவொளி மணிவண்ண(பெரியாழ் திரு 1-2-17)னென்றதை, எழில் நீலமேனி(அமலன்-9)யென்றும், குழல்களிருந்தவா(பெரியாழ் திரு 1-2-20) என்றதை, துளவவிரையார் கமழ்நீண்முடி (அமலன்-7)யென்றும் அருளிச் செய்தார். கோவலனாய் வெண்ணெயுண்டவாய(அமலன்-10) னிறே பெரியபெருமாள். ஆகையால் அநுப₄வத்தில் இருவரும் ஸகோ₃த்ரிகளாயாய்த்திருப்பது. இப்படி மந:ப்ரீதி பிறக்கும்படி அநுப₄வித்த ஆழ்வாரை இங்கு மந:ப்ரீதி பிறக்கும்படி (மநவை) என்று - மநஸ்ஸாலே ஸேவிக்கும்படி சொல்லிற்று.

### திருமலைநம்பி அருளிச்செய்த தனியன்

**காட்டவே கண்ட பாதகமல நல்லாடையுந்தி**
**தேட்டரு முதரபந்தந் திருமார்வு கண்டஞ் செவ்வாய்**
**வாட்டமில் கண்கள்மேனி முனியேறித் தனிபுகுந்து**
**பாட்டினால் கண்டுவாழும் பாணர்தாள் பரவினோமே.**

**அவ.-** (காட்டவேகண்ட பாதகமலம்) பெரிய பெருமாளைப் பாத$_{3}$ாதி$_{3}$கேஶாந்தமாய் அநுப$_{4}$விக்கப்பெற்ற பாண்பெருமாளை ஸ்தோத்ரம் பண்ணி ஹர்ஷிக்கும்படி சொல்லுகிறது.

**வ்யா.-** (காட்டவேகண்ட பாதகமலம்) "அரங்கத்தம்மான் திருக்கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றவே"(அமலன்-1) என்று "ஸ்ரீரங்கேஶயபாத$_{3}$ பங்கஜயுக$_{3}$ம்" (ர.ஸ்த 1-125) என்ற ஸ்ரீரங்க$_{3}$ராஜசரணாம்பு$_{3}$ஜங்களை(*யதிராஜவிம்ஶதி-2*)ச் சொல்லுகிறது. (நல்லாடை) "அரங்கத்தம்மான் அரைச்சிவந்தவாடை"(அமலன்-2) என்று ரங்க$_{3}$து$_{4}$ரந்த$_{4}$ரனுடைய பீதாம்ப$_{3}$ர(ர.ஸ்த 1-120)த்தைச் சொல்லுகிறது. (உந்தி) "அரங்கத்தரவினணையான் அயனைப் படைத்ததோரெழிலுந்தி"(அமலன்-3) என்று விதி$_{4}$ஶிவ நித$_{3}$ாநமான நாபீ$_{4}$பத்$_{3}$ம(ர.ஸ்த 1-116)த்தைச் சொல்லுகிறது.

(தேட்டருமுதரபந்தம்) தேட்டரும் திறல்தேனான தென்னரங்க(பெருமாள் திரு.2-1)னுடைய தேடற்கரிய உத$_{3}$ரப$_{3}$ந்த$_{4}$ம் (பெரிய திரு.9-9-10). "அரங்கத்தம்மான் திருவயிற்றுதரபந்தம்" (அமலன்-4) என்று "படீம் கிலோத$_{3}$ரப$_{3}$ந்த$_{4}$நம்" (ர.ஸ்த 1-115) என்றத்தைச் சொல்லுகிறது. (திருமார்வு) "அரங்கத்தம்மான் திருவாரமார்பு"(அமலன்-5) என்று லக்ஷ்மீலலித க்$_{3}$ருஹ(ர.ஸ்த 1-111)மான வக்ஷஸ்ஸ்த$_{2}$லத்தைச் சொல்லுகிறது. (கண்டம்)

"அரங்கநகர்மேயவப்பன் முற்றுமுண்டகண்டம்" (அமலன்-6) என்று ஸ்ரீரங்க3நேதாவின் கண்ட2(ர.ஸ்ந 1-104)த்தைச் சொல்லுகிறது. (செவ்வாய்) "அணியரங்கனார்-செய்யவாய்" (அமலன்-7) என்று "அத4ர மது4ராம்பே4ாஜம்" (ர. ஸ்த 1-103) என்று அருணாத4ர பல்லவத்தைச் சொல்லுகிறது. (வாட்டமில் கண்கள்) க்ஷணோஜ்ஜ்வலமாய் அழலானியையுடைய தாமரைப்பூவில் வ்யாவ்ருத்தமாய், ஸதை3கருபமாய், "அரங்கத்தமலன் முகத்துக் கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள்" (அமலன்-8) என்று விஶாலஸ்பீ2நாயத்3ருசிரஶிஶிராதாம்ரத4வளமான ஸ்ரீரங்க3ப்ரணயி நயநாப்3ஜங்களை(ர.ஸ்த1-99)ச் சொல்லுகிறது. (மேனி) ஏவம்வித4மான தி3வ்யமங்க3ள விக்3ரஹத்தை.

(முனியேறி) முநிவாஹநராய், (தனிபுகுந்து) இந்த மஹாயோக3த்திலே தாம் ஏகராய் உள்புகுந்து, (பாட்டினால்) அநுப4வத்துக்குப் பாசுரமிட்டுப்பேசின "அமலனாதிப்ரான்" என்கிற ப்ரப3ந்த4த்தின் பாட்டுக்களாலே அண்டர்கோனணி யரங்கனைக் (அமலன்-10) கண்டு வாழுமவராய்த்து இவர். பின்பு இவ்வநுப4வத்துக்கு ப4ட்டர் தே3ஶிகரானார். (கண்டு வாழும்) வாழ்ச்சியே வாழ்ச்சியாக வாழுகிற; (பாணர்தாள்) வீணாபாணியாய்ப் பெரியபெருமாள் திருவடிக்கீழே நிரந்தர ஸேவை பண்ணிக்கொண்டு நின்ற திருப்பாணாழ்வார் திருவடிகளை. (பரவினோம்) ஸ்தோத்ரம் பண்ணினோம். அலப்4யலாப4மானது லபி4க்கவும் பெற்றோம்; இனிமேல் குறைகளுமில்லை யென்கிறது.

பிள்ளைலோகஞ்ஜீயர் அருளிச்செய்த
தனியன் வ்யாக்2யாநம் முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வார்எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே ஶரணம்

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# அமலனாதிபிரான் வ்யாக்2யாநம்

## அவதாரிகை

ப்ரணவம் போலே அதிஸங்குசிதமாயிருத்தல், வேத3மும் வேதோ3பப்3ரும்ஹணமான மஹாபா4ரதமும் போலே பரந்து துறுப்புக்கூடாயிருத்தல் செய்யாதே பத்துப்பாட்டாய் ஸுக்3ரஹமாய் ஸர்வாதி4காரமுமாயிருக்கும். "வேதோ3பப்3ரும்ஹணார்த்த2ாய தாவக்3ராஹயத ப்ரபு4:" (ரா.பா3 4-6) என்றும், "வேதா3நத்4யாபயாமாஸ மஹாபா4ரதபஞ்சமாந்" (பா4ர. ஆதி3 64-131) என்றும் சொல்லுகிறபடியே வேதோ3பப்3ரும்ஹணமான மஹாபா4ரதராமாயணங்களும் "நாராயண கதா2மிமாம்" (பா4ர-ஆதி3 1-27) இத்யாதி3களைச் சொல்லி வைத்து ப4க3வத்கதை2 அல்லாதவற்றையும் சொல்லி வைத்தது.

திருவாய்மொழியும் "அமர்சுவையாயிரம்" (திருவாய் 1-3-11) "பாலோடமுதன்னவாயிரம்" (திருவாய் 8-6-11) "உரைகொளின் மொழி" (திருவாய் 6-5-3) என்று ஏதமிலாயிரமா(திருவாய்1-6-11)யிருந்ததேயாகிலும் அந்யாபதே3ஶஸ்வாபதே3ஶமென்ன, ஸாமாநாதி4கரண்ய நிர்ணாயகமென்ன, த்ரிமூர்த்திஸாம்யதது3த்தீர்ணதத்த்வ நிஷேத4மென்ன இவை தொடக்கமான அருமைகளை

பழுத்தாயிருக்கும்; திருநெடுந்தாண்டகமும் பரப்பற்று முப்பது பாட்டாயிருந்ததேயாகிலும் அதுக்கும் அவ்வருமைகளுண்டு; திருமாலைக்கு அவ்வருமைகளில்லையேயாகிலும் தம்முடைய ஸ்வபா4வஸ்வ4ரூபமான ப்ரியாப்ரியங்களை ப்ரதிபாதி3யாநிற்கும்; திருப்பல்லாண்டுக்கு இக்குற்றங்களில்லையேயாகிலும் அதுக்குமொரு குற்றமுண்டு; த்ரிவித4ாதி4காரிகளுடைய கு3ணாகு3ணங்களை ப்ரதிபாதி3க்கையாலே; ப்ரணவம் போலே அல்ல, அதிஸங்குசிதமாய் து3ர்ஜ்ஞேயமாயிராமையாலே. "யதி3ஹாஸ்தி தத3ந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்" (பா4ர. ஆதி3 62-26) என்கிறபடியே ஆயிரத்திலொன்றும் கடலில் குளப்படியும் போலே புறம்பில்லாதவையெல்லாம் இதிலே உண்டாய் இதிலில்லாததொன்றும் புறம்பின்றியேயிருக்கும்.

பரவ்யூஹவிப4வங்களை ப்ரதிபாதி3க்கையன்றிக்கே அர்ச்சாவதாரரூபேண வந்தவதரித்து, திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி, திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளும் கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு(பெருமாள் திரு 1-1), மணத்தூணே பற்றி நின்று வாயார வாழ்த்துகிற (பெருமாள் திரு 1-2) ப்ரப3ந்த4மாகையாலே எல்லா ப்ரப3ந்த4ங்களிலும் இப்ரப3ந்த4த்துக்கு வைலக்ஷண்யமுண்டு.

மற்றையாழ்வார்களிற்காட்டில் இவர்க்கு நெடுவாசியுண்டு; "பல்லாண்டு" (திருப்பல்-1),"போற்றி" (திருப்பாவை-24) என்று பா4விக்கவேண்டிற்று அவர்களுக்கு; அதுவேண்டாதே ஜந்மஸித்3த4மாய்த்து இவர்க்கு."குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" (திருச்சந்த-90) என்கிறபடியே இவர் தம்மை நாலுவர்ணத்திலும் புறம்பாக நினைத்திருப்பர்;

பெரியபெருமாளும் அப்படியே நினைத்திருப்பர்; நித்யஸூரிகள் நாலுவர்ணத்திலுமுள்ளாரல்லரே. "ஆழ்வார்கள் இருகரையர்" என்னும்படியிறே ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் ஜகாந்த்யம். அவரிலும் இவர் "பரோபதே3ஶமும், இதரநிரஸநமும் அநுப4வவிரோதி4" என்று வெறும் பெரியபெருமாளையே அடித்தலை செவ்விதாக அநுப4விக்கிறார்.

"ஸ்நேஹோ மே பரம:" (ரா.உத் 40-15)"என்ற னளவன்றால் யானுடைய அன்பு" (இரண்டாம் திருவ.100) "ராஜம்ஸ்த்வயி" இதுதானும் என்னாவ் வந்ததன்று; "அதுவுமவனதின்னருளே" (திருவாய் 8-8-3). "நித்யம் ப்ரதிஷ்டி2த:" இன்றன்றாகில் மற்றொருபோது கொடுபோகி றோமென்ன; அங்ஙன் செய்யுமதன்று; த4ர்மியைப்பற்றி வருகிறதாகையாலே; "நின்னலாலிலேன் காண்" (திருவாய் 2-3-7) என்னுமாபோலே. "ப4க்திஶ்ச நியதா" ஸ்நேஹமாவ தென்? ப4க்தியாவதென்? என்னில்; பெருமாளையொழியச் செல்லாமை பிறந்து வ்யதிரேகத்தில் முடிந்த சக்ரவர்த்தி நிலை - ஸ்நேஹம்; ப4க்தியாவது "நில்" என்ன, "குருஷ்வ" (ரா.அ 31-24) என்னும்படியாய் முறையறிந்து பற்றின இளைய பெருமாள் நிலை. "வீர" தன்னைத் தோற்பித்த துறை. உம்முடைய வீரங்கொண்டு புறம்பே வென்றீரென்று இங்கு வெல்லமுடியாது; தானும் வீரனாகையாலே தோற்பித்த துறையைப் பிடித்துப் பேசுகிறான். "ப4ாவோ நாந்யத்ர க3ச்ச2தி" என்னை மீட்டீராகிலும் என்னுடைய நெஞ்சை மீட்கப் போகாது. "அந்யத்ர" என்கிறது "மற்றாரானுமுண்டென்பார்" (சிறிய திருமடல்) என்னுமாபோலே கொடுபோக நினைத்த தே3ஶத்தின் பேருங்கூடத் தனக்கு அஸஹ்யமாயிருக்கிறபடி. இப்படி

ராமாவதாரமல்லதறியாத திருவடியைப் போலேயாய்த்து இவரும், இவர் தேவாரமான பெரியபெருமாளையல்லது பரவ்யூஹ விப்4வங்களை அறியாதபடி.

ஸ்ரீவைகுண்ட2ம், திருப்பாற்கடல், திருவவதாரஸ்த2லம், உகந்தருளின திருப்பதிகள் இவையெல்லாம் பெரிய பெருமாளேயானாப்போலே அவ்வோவிடங்களிலுண்டான ஸௌலப்4யகு3ணசேஷ்டிதாதி3களெல்லாம் பெரியபெருமாள் பக்கலிலே காணலாம். பெரியபெருமாளழகும் ஐச்வர்யமு மெல்லாம் பரமபத3த்திலே முகுளிதமாயிருக்கும்; அவதாரத்தில் நர்லை போரும்; இங்கே வந்த பின்பு தழைத்தது. எங்ஙனேயென்னில் – பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதும் சோராமேயாள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனா(நாச். திரு.11–3) யாகையாலே அவ்வோவிடங்கள் ஸங்குசிதமாயிருந்ததிறே.

தன்னையுகந்தாரை அநுப4விக்கையன்றியே, 'தான்' என்றால் விமுக2ராயிருப்பாரும் கண்டநுப4விக்கலாம்படி யிருக்கையாலே நீர்மையினால் வந்த ஏற்றமுமிங்கேயுண்டு; கு3ணாதி4க்யத்தாலேயிறே வஸ்துவுக்கு உத்கர்ஷம்; கு3ணம் நிலைபெறுவது இங்கேயிறே. கு3ணத்தில் அகப்பட்டார் அவ்விஷயம் போக்கி அறியார்களிறே.

"யதோ வாசோ நிவர்த்தந்தே" (தை. ஆந 9–1) என்று வேத3ங்களுக்கெட்டாத ஸர்வேச்வரனை, ஆற்றில் தண்ணீரோ டொக்க ஆற்றுக்குள்ளே கண்டநுப4விக்கலாம்படியிருக்கிற விடமிறே. மறைக்கின்று வரைமுனேந்தும் மைந்தனே மதுரவாறான

திருமாலை-36)அவ்வாறு இவ்வாறாய்த்துக் காணும். இவர் தமக்கு ப்ராப்யரும், ப்ராபகரும், ருசிஜநகரும், விரோதி$_{4}$நிவர்த்தகமுமெல்லாம் பெரியபெருமாளே என்றிருக்கிறார்.

ப$_{2}$லபே$_{4}$ாக்த்ருத்வம் தம்மதாயிருக்க, "எல்லாமவரே" என்கிறபடி யெங்ஙனேயென்னில்; ப்ரத$_{2}$மஸுக்ருதமும் தானாய், பேற்றுக்கு வேண்டுவன நிர்வஹித்துப் போந்த ஸௌஹார்த்த$_{3}$மும் அத்தலையிலே கிடக்கையாலே, பேற்றுக்கு இத்தலை யிலுள்ளது சொல்லப் பாத்தம் போறாதிறே; உள்ளதுண்டாகில் அவனுக்$_{3}$ரஹத்துக்கு ஹேதுவாமித்தனை. இதரவிஷயங்களில் அருசியும் ப$_{4}$க$_{3}$வத்$_{3}$விஷயத்தில் அப்ரதிஷேத$_{4}$மும் விளைத்த அம்மாத்ரத்திலே பெரியபெருமாள் தம்முடைய ஸ்வரூபரூப கு$_{3}$ணவிபூ$_{4}$திகளைக் காட்டக் கண்டநுப$_{4}$வித்து ப்ரீதராகிறார். "ஆநயைதம் ஹரிஶ்ரேஷ்ட$_{2}$" (ரா. யு. 18-34) என்று மஹாராஜரையிட்டு ஸ்ரீவிபீ$_{4}$ஷணாழ்வானை அருள்பாடிட்டாப் போலே தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து (திருவாய் 3-2-4) கடைத்தலையிருந்து வாழும் சோம்ப(திருமாலை-38) ராயிருக்கிற லோகஸாரங்க$_{3}$மஹாமுநிகளை அருள்பாடிட்டு, 'நம் பாடுவானை அழைத்துக் கொண்டு வாரும்' என்ன; அவரும் 'அருள்பாடருள்பாடு' என்று சொல்ல; இவரும் 'அடியேன் அழைப்பாணனடிப்பாணன்' என்று இறாய்க்க; அவரும் விடாதே தோள்மேலே யெழுந்தருளப் பண்ணுவித்துக் கொண்டு போக, வழியிலே ஒன்பதுபாட்டுப் பாடி, திருப்பிரம்புக்குள்ளே நின்று பத்தாம்பாட்டுப்பாடித் தலைக்கட்டுகிறார்.

1. அமலனாதிபிரான் அடியார்க்கு என்னை ஆட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார்பொழில்
வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன்
நீள்மதிளரங்கத்தம்மான் திருக்
கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன ஒக்கின்றதே.

---

### பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்$_2$யாந அரும்பத$_3$வுரை

அமலன் ப்ரவேஶ: ப்ரப$_3$ந்த$_4$வைலக்ஷண்யமருளிச் செய்கிறார் (ப்ரணவமித்யாதி$_3$). (துறுப்புக்கூடு) பதறும் கூளமும் கூட்டித்தூற்றாப் பொலி. துறுப்புக்கூடானபடி எப்படியென்ன அருளிச்செய்கிறார் (வேதே$_3$ாபப்$_3$ரும்ஹணேத்யாதி$_3$). எல்லா வற்றிலும் பற்ற ஆதி$_4$க்யம் எத்தாலேயென்ன, அருளிச்செய்கிறார் (யதி$_2$ஹாஸ்தீத்யாதி$_3$). வக்த்ருவைலக்ஷண்ய மருளிச்செய்கிறார் (மற்றையாழ்வார்களித்யாதி$_3$). பெருமாளையொழிய வேறொரு ஸ்த$_2$லாந்தரமறியாது எப்படியிருக்கிறதென்ன, அருளிச் செய்கிறார் (ஸ்நேஹோ மே யித்யாதி$_3$). எல்லா ஸ்த$_2$லங்களையும் விட்டுப் பெரியபெருமாளைப் பற்றுகைக்கு ஹேதுவேதென்ன, அருளிச்செய்கிறார் (ஸ்ரீவைகுண்ட$_2$ மித்யாதி$_3$). (அவ்வாறு ஆவ்வாறு) என்றது – ரஸோக்தி. க்ருஷ்ணன் தானே வந்து ஆவ்வாற்றிலே கண்வளர்த்தானென்றபடி. ப்ரதிபாத்$_3$ய வைலக்ஷண்யத்தைச் சொல்லாநின்று கொண்டு ப்ரப$_3$ந்த$_4$த்தி னுடைய அவதரணக்ரமத்தை அருளிச்செய்கிறார் (இவர் தமக்கித்யாதி$_3$).

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்$_2$யாநம்

அவ. – முதற்பாட்டு. பெரியபெருமாள் திருவடிகளிலழகு மேல்விழுந்து தம்மை அடிமைகொண்டதென்கிறார்.

வ்யா. – (அமலன்) நித்யஸம்ஸாரியாய்த் தண்ணியராயிருக்கிற தாம் கிட்டுகை அத்தலைக்கு அவத்$_3$யமென்றிருந்தார். வந்துகிட்டின பின்பு பெரியபெருமாளுக்குப் பிறந்த வைவக்ஷண்யத்தைக் கண்டு "அமலன்" என்று கொண்டாடுகிறார். "அமலன்" என்றது ஹேயப்ரத்யநீகனென்றபடி.அபஹதபாப்மத்வாதி$_3$கு$_3$ணங்கள் ஆத்மாவுக்குண்டாயிருக்கச் செய்தேயும் ஹேயஸம்ப$_3$ந்த$_4$ாவஹமாய், ப$_4$க$_3$வத்ப்ரஸாத$_3$த்தாலே உண்டாகவேண்டியிருக்கும். இவன் அங்ஙனன்றிக்கேயிருக்கை.

(அமலன்) ஶுத்$_3$த$_4$னென்றபடி. இவன் ஶுத்$_3$த$_4$னாகையாவது – தான் ஒருத்தன் ஶுத்$_3$த$_4$னாகையன்று; தன்னோடு ஸம்ப$_3$ந்தி$_4$த்தாரையும் ஶுத்$_3$த$_4$ராக்கவல்ல அடியுடைமை. துயரறு சுடரடி(திருவாய் 1–1–1)யிறே. "பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகு$_4$நந்த$_3$ந" (ரா.உத் 82–9) என்னுமாபோலே. (அமலன்) என்கிறது – ஜந்மவ்ருத்தாதி$_3$களால் குறையநின்ற தம்மை விஷயீகரித்த பின்பு தன்பக்கல் தோ$_3$ஷம் தட்டாதே, "அநஶ்நந்நந்யோ அபி$_4$சாகஶீ தி" (முண்ட$_3$க 3–1–1) என்கிறபடியே விளங்குகிறபடி. "என்கண் பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே"(திருவாய் 3–3–4).

(ஆதி) "ஆதீ$_3$யத இதி ஆதி$_3$:" ஸ்ப்ருஹணீயனென்றபடி. தம்மை விஷயீகரிக்கைக்கு அடியானானென்று

"அத்" என்னவுமாம். ஜக3த்காரணத்வாதி3களைச் சொல்லவுமாம். ஆக, இரண்டு பத3த்தாலும் ஹேயப்ரத்யநீகத்வமும் கல்யாணகு3ணயோக3மும் சொல்லுகிறது.

(பிரான்) இவ்வோநிலைகளை எனக்கறிவித்த உபகாரகன். (பிரான்) உபகாரத்தைச் சொல்லி, சொல்லப்பற்றாமே "எத்திறம்" (திருவாய் 1-3-1) என்கிறார். (அடியார்க்கு) "ரத்நஹாரீ ச பார்த்2வ:" (ரா.பா3 53-9) என்கிறபடியே இவ்வஸ்துவின் சீர்மையாலே இது நம்மளவிலடங்காது. நம்மடியார்க்காக்குமையென்று அவர்களுக்காக்கினானென்கிறார். (அடியார்) தம்பக்கலிலே நிக்ஷிப்தப4ரரா யிருக்குமவர்கள்.

(என்னையாள்படுத்த விமலன்) தன்னுடையாட்டுமறியாத என்னைத் தன்னடியார்க்கு ஶேஷபூ4தனாக்கின [illegible]னென்கிறார். (என்னை) ப்ரக்ருதிக்கு அடிமைசெய்து போந்தவென்னை; தந்த4நத்தின் சீர்மையறியாத வென்னை. (என்னை) தே3ஹாத்மாபி4மாநிகள் தீண்டாதவென்னை. தன்மைக்குத் தனக்கவ்வருகில்லாதாப்போலே தீமைக்கு மெனக்கவ்வருகில்லாத என்னை. (ஆள்படுத்த) அவர்களோடே [illegible] வைத்திலன்; அவர்களுக்கு ஶேஷமாக்கினான். [illegible]ஷத்வத்தளவிலே நின்றால் மீள ஶங்கையுண்டு [illegible] ஶேஷத்வத்தளவும் சென்றால் மீளப்போகாதே: [illegible] வருமதாகையாலே. ஒரு க்ஷேத்ரம் பத்தெட்டு க்ரயம் [illegible] மீளவிரகில்லை. ஸ்ரீவிபீ4ஷணாழ்வானுக்கு [illegible] விஷயீகாரம் பெருமாளுடைய விஷயீகாரத்துக்கு [illegible]போலே இவர்க்குத் ததீ3ய விஷயீகாரம் முற்பட்டபடி. [illegible]" (ரா. யு 17-2) "ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட2!"

(ரா.யு 18–38) அங்கு; இங்கு லோகஸாரங்க3 மஹாமுநிகளைப் போய் ஆழ்வாரை அழைத்துக் கொண்டுவாரு மென்றான்.

(அடியார்க்கென்னை ஆட்படுத்த) தான் ஶேஷித்வத்தினுடைய எல்லையிலே நின்றாப்போலே ஶேஷத்வத்தினெல்லையிலே என்னை வைத்தான். (விமலன்) என் சிறுமை பாராதே ததீ3யர்க்கு ஶேஷமாக்குகையால் வந்த ஔஜ்ஜ்வல்யம். எதிர்கள் தரம்பாராதே சீரியர் தந்தாமளவிலேயிறே கொடுப்பது.

(விண்ணவர்கோன்) ஆளில்லாதவனல்லன் கிடீர் இப்படி விஷயீகரித்தான். நித்யஸூரிகள் எடுத்துக் கைநீட்டும்படி இருக்கிறவன் கிடீர் கதிர்பொறுக்கி ஜீவிப்பாரைப் போலே நித்ய ஸம்ஸாரியாயிருக்கிற வென்னை நித்யமுக்தரோடொக்க விஷயீகரித்தான். இவ்வௌதா3ர்யம் கற்றதும் அவர்களோடே கிடீரென்றுமாம். "அஸ்மாபி4ஸ் துல்யோ ப4வது" (ரா. யு-18.38)என்றார்களிறே. (விண்ணவர்கோன்) இங்குத்தைக் குழாத்தையொழிய அங்குத்தைக் குழாத்தையும் காட்டித் தந்தான். "உடன்கூடுவதென்று கொலோ?" (திருவாய் 2-3-10) என்று இவர் ஆசைப்படவேண்டுவதில்லை. (கோன்) அவர்களாலும் எல்லைகாணவொண்ணாது. (விரையார் பொழில் வேங்கடவன்) பரிமளம் நிறைந்திருந்துள்ள சோலையையுடைய திருவேங்கட மலையையுடையவன். பெரியபெருமாளைப் பாடாநிற்கத் திருமலையிலே போவானென்னென்னில்; ஒருவனைக் கவிபாடும்போது அவனுடைய வரத்துச் சொல்லியிறே கவிபாடுவது. "பரமபத3த்தில் நின்றும் ஸ்ரீமதுரையிலே தங்கித் திருவாய்ப்பாடிக்கு வந்தாப்போலே, ஸ்ரீவைகுண்ட2த்தினின்றும்

திருமலையிலே தங்கிக்காணும் கோயிலுக்கு வந்தது" என்று பட்டரருளிச்செய்யும்படி. அன்றியே, கோயில் பே$_{4}$ாக்$_{3}$யதை நமக்கு நிலமல்லாமையாலே திருமலையிலே போய் த$_{4}$ரிக்கப் பார்க்கிறாரென்றுமாம். (விரையார்) நித்யஸூரிகளை உடையனாவதுக்கு மேலே ஓரைஶ்வர்யம்.

(விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்) ஆற்றிலே வழுந்துவார் ஆழங்காலிலே இளைப்பாறத் தேடுமாபோலே அவர்களும் வந்து அடிமை செய்யுமிடம். (வேங்கடவன்) அர்ச்சாவதாரத்துக்குப் பொற்கால் பொலியவிட்டவிடம்.

(நிமலன்) இத்தலையில் அர்த்தி$_{2}$த்வமும் கூடவின்றிக்கே இருக்க, இப்படி உபகரிக்கையால் வந்த ஔஜ்ஜ்வல்யம். இவனும் மூடியிடப்பார்த்திராதொழிகை. அசித் வ்யாவ்ருத்தியாலே மூடியிட்டாருண்டாகில் "பத்$_{3}$ப்$_{4}$யாமபி$_{4}$க$_{3}$மாச்சைவ ஸ்நேஹ வபுந்த$_{3}$ர்ஶநேந ச" (ரா. அ 50–41). (நின்மலன்) இத்தலைக்கு உபகரித்தானாயிருக்கையன்றிக்கே தன்பேறாயிருக்கை. "அமலன்" என்று தனக்காக்கினபடி; "விமலன்" என்று தன்னடியார்க்காக்கினபடி; "நிமலன்" என்று நான் பச்சையிடாதிருக்க என்கார்யம் செய்தானென்கிறார். (நின்மலன்) இது தன்பேறாகச் செய்தானென்கிறார். "க்ருதக்ருத்யஸ் தத$_{3}$ா ராம:" (ரா.யு 1–85) என்கிறபடியே.

(நீதிவானவன்) ஶேஷஶேஷித்வங்கள் முறைமாறாத நித்யவிபூ$_{4}$தியிலேயுள்ளவன். "ஈஶ்வரோऽஹம்" (கீ$_{3}$தா 16 – 14) என்று எதிரிட்டிருக்குமிடமிறே இவ்விடம். அங்கு கலக்குவாருமில்லை, கலங்குவாருமில்லை; இங்கு

கலக்குவாருமுண்டு. கலங்குவாருமுண்டு. (நீண்மதிளரங் கத்தம்மான்) நீதிவானவன் என்னா, நீண்மதிளரங்கத்தம்மா னென்கிறார். "அளப்பரியஆரமுதை அரங்கம் மேய அந்தணனை" (திருநெடு-14)என்னுமாபோலே. (நீண்மதிள ரங்கத்தம்மான்) ரக்ஷகத்வத்துக்குப் போரும்படியான மதிளை யுடைய பெரியகோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பரமபோஷி. (அம்மான்) ஈரரசுதவிர்ந்தாலிறே போஷித்வம் பூர்ணமாவது. திருமலையில் பே₄ாக்₃யதை நிலமல்லாமையாலே மீளவும் கோயிலிலே புகுகிறார். வெள்ளத்தைக் கள்ளமடையாலே பள்ளத்தே விடுமாபோலே, திருவேங்கடமுடையான் வடக்குத் திருவாசலாலே வந்து புகுந்தானத்தனை என்றுமாம். (திருக்கமலபாதம்) செவ்வியும், குளிர்த்தியும், விகாஸமும், பரிமளமும் தொடக்கமானவை. ஆதி₃த்யனைக் கண்டாலிறே தாமரையலருவது; இத்தாமரைக்கு ஆதி₃த்யன் இவர். பிராட்டி திருமுலைத்தடங்களிலும் திருக்கண்களிலும் ஒற்றிக்கொள்ளும் திருவடிகள். இவருடைய தளிர்புரையும் திருவடி(திருநெடு-1) களிருக்கிறபடி. (அம்மான் திருக்கமலபாதம்) தொடர்ந்து வருகைக்கு ப்ராப்தி. (வந்து) த்₃வீபாந்தரத்தில் சரக்குச் சேரவேண்டினால் பாதிப்பாதி வழியாகிலும் வருதல், ஒருதலைப்பற்றுதல் செய்ய வேணுமிறே; அங்ஙனன்றியே, "வந்துனதடியேன் மனம் புகுந்தாய்" (பெரிய திரு 3-5-1) என்கிறபடியே வழிவந்தானும் தானே, பற்றினானும் தானே என்கிறது. (என் கண்ணினுள்ளன) *** (நீதிவானவன் கமலபாதம் - என் கண்ணினுள்ளன) ஸதா₃த₃ர்பநம் பண்ணுகிறவர்கள் கண்ணுக்கிலக்கானது கீழ் என் கண்ணுக்கிலக்காகிறது!

*** ஒரு வாகயம் நழுவிற்று

வல்லதனை நாளும் விரோத$_4$ம் பண்ணினேன்; போக்கற்றவாறே பன்கண்ணைச் செம்பளித்தேன்; தொடர்ந்து வந்து செம்பளித்த கண்ணையுறுத்து உள்ளேபுகுந்து நிற்கையாலே என் கண்ணினுள்ளன என்கிறார். அன்றியே தம் கண்ணாலே பார்க்கை அவத்$_3$யமென்று கண்ணைச் செம்பளித்தார்; கண்ணினுள்ளே ப்ரகாஶிக்கத் தொடங்கிற்று.

(ஒக்கின்ற) ப்ரயோஜநம் இரண்டுதலைக்கும் ஒத்திரா நின்றது; அங்குத்தைக்கு ஶீலஸித்$_3$தி$_4$; இங்குத்தைக்கு ஸ்வரூபஸித்$_3$தி$_4$. (ஒக்கின்ற) ப்ரத்யக்ஷஸமாநாகாரமாயிருந்த தென்னுதல்; என் கண்ணுக்கிலக்கான விடத்திலும் பழைய நிலை குலையாதிருந்ததென்னுதல்; ஸம்ஸாரிகளைப் பார்த்து உங்களுக்கு மொக்குமோ வென்கிறாராதல்; இந்த லாப$_4$ம் அத்தலைக்குமொக்குமோ வென்கிறாராதல்.

(அமலன்) உயர்வறவுயர்நலமுடையவன்(திருவாய் 1–1–1). (ஆதி) யவன்(திருவாய் 1–1–1). (பிரான்) மயர்வறமதிநலமருளினன் (திருவாய் 1–1–1). (அடியார்க்கு) பயிலுஞ்சுடரொளி(திருவாய் 3–7). (விண்ணவர் கோன்) அயர்வறுமமரர்களதிபதி(திருவாய் 1–1–1). (விரை) அவர் தொழுதெழு (திருவாய் 1–1–1) என்றார், இவர்க்கு [illegible]னே வந்துநின்றன.

---

[illegible] முதற்பாட்டு. அமலத்வம் முக்தர்க்கும் உண்டேயென்ன, [illegible] செய்கிறார்(அபஹதபாப்மேத்யாதி$_3$). ஶுத்$_3$த$_4$னென்று [illegible] ந்தரம். முந்தின அர்த்த$_2$த்திலே அருளிச்செய்கிறார் ([illegible]தாதி$_3$களித்யாதி$_3$).

2. உவந்தவுள்ளத்தனாய் உலகமளந்து அண்டமுற
நிவர்ந்தநீண்முடியன் அன்று நேர்ந்த நிசாசரரைக்
கவர்ந்த வெங்கணைக்காகுத்தன் கடியார்
பொழிலரங்கத்தம்மான் அரைச்
சிவந்த ஆடையின் மேல் சென்றதாம் என சிந்தனையே.

அவ: இரண்டாம்பாட்டு. முதற்பாட்டில் – அவன் தொடர்ந்து வந்தபடி சொன்னார்; இப்பாட்டில் – தாம் மேல்விழுந்தபடி சொல்லுகிறார்.

(ஆத்$_3$யதே) ஆத$_3$ரம் பண்ணப்படுகை. ஸ்வீகரிக்கப் படுகிறானென்றபடி. "பிரான்" என்றது கீழைப்பற்றவாதல்; மேலைப்பற்றவாதல். (என்னை) தன் ஸத்$_3$பா$_4$வமறியாத வென்னையென்னுதல். தன் கல்யாணகு$_3$ணமறியாத வென்னையென்னுதல். "ஆட்படுத்த" என்றத்தால் ஆதி$_4$க்யமேதென்ன அருளிச்செய்கிறார் (ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வ மித்யாதி$_3$).

"விண்ணவர்கோன்" என்கையாலே, ஶேஷித்வத்தி னெல்லையென்கை. ஆழங்கால்-வ்யங்க்$_1$யம். ஶீலகு$_3$ண மிகுதியாலே ஆழங்காலென்கிறது. இவனுடைய அத்$_3$வேஷாதி$_3$களும் பொறுக்கமாட்டானென்னுமத்தை அருளுகிறார் (பத்$_3$ப்$_4$யாமித்யாதி$_3$).

கலக்குகிறது-ப்ராக்ருதி, கலங்குகிறான்-ப$_3$த்$_3$தா$_4$த்மா (திரு) பூஜ்யவாசியாதல், பிராட்டியாதல். விண்ணவர்கோன் என்று த்$_3$விபாந்தரவஸ்து. கண்ணுக்கு விஷயமென்னாமல் உள்ளன வென்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (வல்லதனை நாளுமித்யாதி$_3$). ஒக்கின்ற என்கையாலே நிலைகுலையாதிருக்கை.

திருவடிகளிலே தொடர்ந்த திருவுள்ளம் திருப்பரியட்டத்தின் மேல் சேர்த்தபடி யெங்ஙனேயென்னில்; தானறிந்து சேரில் விஷயத்தின் போ$_4$க்$_3$யதைக்குக் குற்றமாம். ஆகையாலே போ$_4$க்$_3$யதை அளவுபட்டதுமல்ல, ஆசை தலைமடிந்ததுமல்ல; கடலோதம் கிளர்ந்தலைக்கப்புக்கால் உள்ளே கிடந்ததொரு துரும்பு கடலை அளவிட்டவல்லவே கரையேறுவது; ஒருதிரை ஒருதிரையிலே ஏற விசுமத்தனையிறே.

வ்யா:- (உவந்தவுள்ளத்தனாய்) ஆழ்வாரை [illegible]டுத்துகையால் வந்த ப்ரீதி. ஸர்வேச்வரனாய் ச்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாயிருக்கிறவன் அர்த்தி$_2$யாய் வந்து, தன் திருவடிகளைத் தலையிலே வையா நின்றால் "மதீ$_1$யமூர்த்த$_4$ாநம் அலங்கரிஷ்யதி" (ஸ்தோ. ர-31) என்று தரிக்க வேண்டியிருக்க, அவையறியாதொழிய, ப்ரஜை பால்குடிக்கக்கண்டு உகக்கும் மாதாவைப்போலே உகந்த திருவுள்ளத்தை யுடையவனாய். இவற்றைப் பிரிந்தால் வ்யஸநமும் தன்னதேயிறே; "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்$_4$ருசம் ப$_4$வதி" (பா. அ. 2–40) என்கிறபடியே.

(உலகமளந்து) வகுத்த திருவடிகள் தலையிலே [illegible]ங்காலும் உகக்கவறியாத லோகத்தைக் கிடீர் [illegible] ரதே யளந்தது! உகக்கவறியாமைக்கு [illegible](திருவாய் 3-2-2)மிறே. கு$_3$ணாகு$_3$ணநிரூபணம் [illegible]ே, எல்லார் தலையிலும் ஒக்கத் திருவடிகளை [illegible]லே, ப$_4$க்திமான்களும், பாதகிகளும் ஒக்க வாழ்ந்து [illegible].

(அண்டமுற நிவர்ந்த நீண்முடியன்) அண்ட$_3$கடாஹத்திலே சென்று சேர்ந்த திருவபி$_4$ஷேகத்தையுடையவன். அண்ட$_3$கடாஹம் வெடித்து அடைகட்ட வேண்டும்படியிறே அபேக்ஷிதம் பெற்று வளர்ந்தபடி. (அண்டமுற) "அண்டம் மோழையெழ"(திருவாய் 7–4–1).

(நிவர்ந்த) நிமிர்ந்த, பூவலர்ந்தாப் போலே. (நீண்முடியன்) உப$_4$யவிபூ$_4$திக்கும் நிர்வாஹகனென்று தோற்றும்படியிருக்கிற திருவபி$_4$ஷேகத்தையுடையவன். ரக்ஷ்யவர்க்$_3$க$_3$த்தை நோக்கினாலிறே ரக்ஷகன் முடித$_4$ரிப்பது. (அன்றித்யாதி$_3$) கண்ட காட்சியிலே "ஜிதம்" என்ன வேண்டும்படியிருக்குமவனிறே. எதிரிட்ட பையல்களை முடிக்கைக்கு வெவ்விய ஶரத்தையுடைய சக்ரவர்த்தித்திருமகன். (அன்று) ரக்ஷகனானவன் ரக்ஷ்யத்தை நோக்கக்கடவதாக வந்து நின்றவன்று. (நேர்ந்த நிசாசரரை) எதிரிட்ட நிஶாசரரை. நேர்ந்த நிசாசரர் என்கிறது – திருப்பல்லாண்டு பாடவேண்டுமழகைக்கண்டும் எதிரம்பு கோப்பதே! என்று. (நிசாசரர்) வெளியில் முக$_2$ங்கண்டறியாத பையல்கள். (கவர்ந்த) புறப்படும்போது விநயத்தோடு புறப்பட்டு, வேட்டை நாய்கள் ஓடி மேல்விழுமாபோலே விழுகை. (வெங்கணை) விடும்போது அம்பாய், படும்போது காலாக்$_3$நி போலேயிருக்கை. "தீ$_3$ப்தபாவக ஸங்காஶைஶ்ஶரை:" *(ரா.யு.16–32)* என்கிறபடியே பெருமாள் கண்பார்க்கிலும் முடித்தல்லது நில்லாத வெம்மை.

(காகுத்தன்) குடிப்பிறப்பால் தரம் பாராதே விஷயீகரித்தபடியும் வீரவாசியும்.

(குடியார்பொழில்) திருவுலகளத்தருளினவிடமே பிடித்து அடியொற்றி, ராவணவத₄ம் பண்ணித் தெற்குத் திருவாசலாலே புகுந்து சாய்ந்தருளினான். இன்னமும் வேர்ப்பங்கிற்றில்லை. திருச்சோலையில் பரிமளம் விடாயர்க்கு ஶிஶிரோபசாரமானபடி. (அரங்கத்தம்மான்) அவதாரத்துக்குப் பிற்பாடர்க்கும் இழவுதீரக் கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறபடி. (அம்மான்) இங்கே வந்த பின்பு ஶஸ்வரத்வம் நிலைநிற்கை.

(அரைச்சிவந்தவாடை) உடையார்த்த வாடை(திருவாய் 3–7–4); செக்கர்மாமுகில் (திருவாசிரியம்–1); திருமேனிக்குப் பரப₄ாக₃மான திருப்பீதாம்ப₃ரம். (சிவத்தவாடையின் மேல் சென்றதாம்) "சோற்றின் மேலே எனக்கு மனஞ்சென்றது" – என்னுமாப்போலே ஆஶ்சர்யப்படுகிறார். (என சிந்தனை) ஆருடைய கூறையுடையைக் கண்டு உகக்கக்கடவ நெஞ்சு ஆதிலே யகப்பட்டது. (என சிந்தனை) திருவடிகளின் சுவடறிந்த பின்பு புறம்பு போகமாட்டாத நெஞ்சு. தீர்த்தமாடா நிற்கத் துறையிலே பிள்ளையைக் கெடுத்துத் திருவோலக்கத்திலே காண்பாரைப்போலே திருவடிகளில் நின்றும் திருப்பீதாம்ப₃ரத்திலே திருவுள்ளத்தைக் கண்டபடி.

---

அரு – இரண்டாம்பாட்டு. (உவந்தவித்யாதி₃) (தானறிந்து சேரில்) திருவரையில் பே₄ாக்₃யதையையறிந்து கிட்டிலென்றபடி. (விஷயத்தின் பே₄ாக்₃யதை) திருவடிகளின் பே₄ாக்₃யதை. (உகப்பு) ஆழ்வார்விஷயமாதல்; லோகவிஷயமாதல். உகக்க அறியாவிட்டால் வைப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (ஞ₂ணாகு₃ணேத்யாதி₃). (அடைகட்ட) தமரிட அளப்பதற்கு முன்பு நீண்முடியில்லையோவென்ன அருளிச்செய்கிறார்

இத்தால் திருவுலகளந்தருளினத்தையும் ராமாவதாரத்தையும்பெரியபெருமாள் பக்கலிலே ஓரோவகைகளாலே காண்கிறார். (2)

3. மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள்
சந்திசெய்யநின்றான் அரங்கத்தரவினணையான்
அந்திபோல் நிறத்தாடையும் அதன் மேலயனைப்
படைத்ததோரெழில்
உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே.

அவ: மூன்றாம்பாட்டு. திருப்பீதாம்ப$_{3}$ரத்தினழகு திருநாபீ$_{4}$கமலத்திலே விசிற்று.

வ்யா – (மந்திபாய்) திருமலையில் பலாக்கள் வேரே பிடித்துத் தலையளவும் பழுத்துக்கிடக்கையாலே அங்குத்தைக் குரங்குகள் ஜாத்யுசிதசாபலத்தாலே ஒரு பழத்தை பு$_{4}$ஜிக்கப்புக மற்றை மேலில் பழத்திலே கண்ணையோட்டி இத்தைவிட்டு அதிலே பாய்ந்து தாவாநிற்குமத்தனையாய்த்து. பெரியபெருமாளுடைய தி$_{3}$வ்யாவயவங்களிலே தாம் ஆழங்கால் படுகிறாப் போலேயாய்த்து அவைகளும். கானமும் வானரமும் வேடுமுடை வேங்கட(நான்.திருவ–47)மிறே. (மந்திபாய்) ஒன்றையொன்று பற்றி மாலையாக நாலாநிற்கும். திருச்சின்னக்குரல் கேட்டவாறே பாய்ந்தோடா நிற்குமென்றுமாம். பரமபத$_{3}$மும், திருமலையும், கோயிலும், திருவயோத்$_{4}$யையும், திருச்சோலையும் ஒருபே$_{4}$ாகி$_{3}$யாயிருக்கிறபடி. எங்கும் மாறிமாறித் தங்குகை. (மந்திபாய்) பலாக்கள் வேரோடு

---

(ரக்ஷ்யவர்க்க$_{3}$த்தையித்யாதி$_{5}$). (விஷயீகரிக்கை) விபீ$_{4}$ஷணாழ்வானை.

பணையோடு வாசியறப் பழுந்துக் கிடக்கையாலே ஒன்றிலே வாய்வைக்கப் பெறாதே தான் வேண்டினபடியே திரியும்படியாய்த்து.

(வடவேங்கடம்) தமிழ்தே$_3$ஶத்துக்கு எல்லைநிலம். (மாமலை) பே$_4$ாக்$_3$யதை அளவற்றிருக்கை. உப$_4$யவிபூ$_4$தியும் ஒரு மூலையிலே அடங்குமென்றுமாம்.

(வானவர்கள் சந்திசெய்ய நின்றான்) எத்தனையேனும் தண்ணியார்க்கும் முக$_2$ங்கொடுத்து நிற்கிற இந்நீர்மையை யநுஸந்தி$_4$த்து, நித்யஸூரிகள் வந்து படுகாடுகிடப்பது இங்கேயாய்த்து. மேன்மையை அநுப$_4$விக்குமத்தனையிறே அங்கு; ஶீலாநுப$_4$வம் பண்ணலாவது இங்கேயிறே.

நித்யஸூரிகள் திருமலையிலே நிற்கிற ஶீலவத்தையிலே ஈடுபட்டு வந்து ஆஶ்ரயிக்க, குருடர்க்கு வைத்த அறச்சாலையிலே விழிகண்ணர் புகுரலாமோவென்று, தான் ஆனைக்குப்பாடுவாரைப் போலே மந்திகள் பக்கலிலே திருவுள்ளத்தை வைத்தானென்றுமாம்.

(அரங்கத்தரவினணையான்) அங்கு நின்றும் இங்கே சாய்ந்தபடி. பரமபத$_3$த்தினின்றும் அடியொற்றினான்; திருமலையளவும் பயணமுண்டாயிருந்தது; அங்கு நின்றும் வடக்குத் திருவாசலாலே கோயிலிலே சாய்ந்தான். ராமாவதாரத்தே பிடித்து அடியொற்றினான்; ராவணவத$_4$ம்பண்ணித் தெற்குத் திருவாசலாலே வந்து சாய்ந்தவித்தனையா யிருந்ததென்றுமாம். (அரவினணையான்) திரிகிறவன் சாய்ந்தருளினால் உள்ளவழகு. (அரவு) நாற்றம், குளிர்த்தி,

மென்மையும். (அரங்கத்தரவினணையான்) "ஶேஷேயே புரஸ்தாச்ச$_2$ாலாயாம்" (ரா.அ 111–14) ஶ்ரீப$_4$ரதாழ்வானை வளைப்புக் கிடக்க விட்டுப்போந்து கடற்கரையிலே வளைப்புக் கிடந்தாப்போலே ஸம்ஸாரிகளைப் பெற்றாலல்லது போகேனென்று வளைப்புக் கிடக்கிறான். சக்ரவர்த்தித் திருமகனைப் போலே முதலில் ஶரணம்புக்கு முக$_2$ங்காட்டாவிட்டவாறே, "சாபமாநய" (ரா.யு 21–22) என்று சீறுமவரல்லர்; ஆற்றாமையைக்காட்டி ஶரணம் புக்குக் கிடக்குமவரிறே இவர்,

(அந்திபோல் திறந்தாடையும்) ஸந்த்$_4$யாராக$_3$ம் போலேயிருந்துள்ள திருப்பீதாம்ப$_3$ரமும். "அரைச்சிவந்த வாடை" என்றது பின்னாட்டுகிறபடி.

(அதன் மேல்) இவ்வழகினின்றும் கால்வாங்கமாட்டுகிறிலர். (அயனித்யாதி$_3$) சதுர்த்த$_3$ஶபு$_4$வந ஸ்ரஷ்டாவான ப்$_3$ரஹ்மாவுக்கு உத்பத்திஸ்த$_2$ாநமான திருநாபீ$_4$கமலத்தின் மேலதன்றோ. சதுர்முக$_2$ ஸ்ருஷ்டி பூர்வகாலத்திலேயாகிலும், இப்போதும்(?) ப்$_3$ரஹ்மாவுக்கு உத்பத்திஸ்த$_2$ாநமென்று கோள் சொல்லித்தாராதின்றது, திருநாபீ$_4$கமலம். (எழிலுந்தி) இளகிப்பதிக்கை. "ப்ரஸவாந்தஞ்ச யௌவநம்" ( ?) என்கிறபடி யன்றிக்கேயிருக்கை.

(அடியேன்) "பதிம் விஶ்வஸ்ய" (தை. நா – 11), "யஸ்யாஸ்மி" (யஜுர்.ப்$_3$ரா 3–7) என்கிற ப்ரமாணத்தாலே அடியேன் என்கிறாரல்லர். அழகுக்குத் தோற்று "அடியேன்" என்கிறார். (அடியேனுள்ளத்தின்னுயிரே) என்னுடைய நற்சீவனானது திருநாபீ$_4$கமலத்ததன்றோ

யைன்கிறார்.

விடாமைக்குப் பற்றாசு; "மருடியேலும் விடேல் கண்டாய்" (திருவாய் 2-7-10) என்னுமாப்போலே. இப்பாட்டில் பாரியபெருமாள் பக்கலிலே திருவேங்கடமுடையான் தன்மையுமுண்டென்கிறது.(3)

சதுரமாமதிள்சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்து
உதிரவோட்டி ஓர்வெங்கணையுய்த்தவன் ஓதவண்ணன்
மதுரமாவண்டுபாடமாமயிலாடரங்கத்தம்மான் திருவயிற்று
உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே. (4)

அவ.- நான்காம்பாட்டு. திருநாபீ₄கமலத்தோடே சேர்ந்த த்₃ருவுத₃ரப₃ந்த₄நத்தை அநுப₄விக்கிறார்.

வ்யா.- (சதுரமாமதிளித்யாதி₃) கட்டளைப்பட்டிருக்கை. (மாமதிள்) து₃ர்க்க₃த்ரயம். "ஈச்வரன்" என்றறியச்செய்தே எதிர்க்கப் பண்ணின மதிள். (இலங்கைக்கிறைவன்) மு(ள)ழஞ்சிலே ஸிம்ஹங்கிடந்த தென்னுமாப்போலே. "லங்காம் ராவணபாலிதாம்" (ரா. ஸு 1-39). (இலங்கைக்கிறைவன்)

அரு:- மூன்றாம்பாட்டு. தாத்பர்யத்தை யருளிச் செய்கிறார். (பரமபத₃முமித்யாதி₃) (சந்திசெய்ய) கிட்டும்படி நின்றானென்னுதல்; ஆஶ்ரயிக்க நிற்கப் பராக்காய் நின்றானென்னுதல். முதற்பாட்டைக் கடாக்ஷித்துப் பரமபத₃த்தில் நின்றும் அடியொற்றுதல்; இரண்டாம்பாட்டைக் கடாக்ஷித்து ராமாவதாரத்திலே அடியொற்றுதல். உந்தியைப் பற்றாசாகப் பற்றினவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (மருடியேலுமித்யாதி₃).

ஸர்வேஶ்வரன் ஸ்ரீவைகுண்ட$_2$த்தைக் கலவிருக்கையாகக் கொண்டு வீற்றிருந்தாப்போலேகாணும் இவனும் இலங்கைக்கு ஈஶ்வரனென்றிருந்தபடி.

விரக்தனான திருவடியுங்கூட மதித்த ஐஶ்வர்யமிறே. "யத்$_3$யத$_4$ர்மோ ந ப$_3$லவாந் ஸ்யாத$_3$யம் ராக்ஷஸேஶ்வர:। ஸ்யாத$_3$யம் ஸுரலோகஸ்ய ஶக்ரஸ்யாபி ச ரக்ஷிதா॥" (ரா. ஸு 49–17) என்றானிறே. யாவனொருவனுக்காக இவனை அழியச் செய்ய நினைக்கிறார், அவன்தன்னையே இவ்வரணுக்குக் காவலாக வைப்பர்கிளர் அஸ்யமநுகூலித்தானாகில்.

(குலைபத்துதிற) பனங்குலை உதிர்த்தாப்போலே யுதிர. அறுக்கவறுக்க முளைத்த சடக்கு. (ஓட்டி) அநுகூலிக்குமாகில் அழியச்செய்ய வேண்டாவிறேயென்று பூசலிலே இளைப்பித்து விட்டபடி. "க$_3$ச்ச$_2$ாநுஜாநாமி" (ரா. யு 59–144) என்கிறபடியே.

(ஓர்வெங்கணையுய்த்தவன்) பிற்றைநாளைப் பூசலிலே ஜயாபஜயங்கள் அவ்யவஸ்தி$_2$தமன்றோவென்று ப்$_3$ரஹ்மாதி$_3$கள் கருதினவாறே. அத்தலைகளுக்கு வேர்ப்பற்றான நெஞ்சிலே அத்$_3$விதீயமான ப்$_3$ரஹ்மாஸ்த்ரத்தை விட்டவன். அவன் ப்ராதிகூல்யத்தில் நிலைநின்றானென்று அறிந்தபின்பு ப்$_3$ரஹ்மாஸ்த்ரத்தை விட்டபடி.

(ஓதவண்ணன்) ராவணவத$_4$ம் பண்ணி ஸ்ரீவிபீ$_4$ஷணாழ்வாளுக்கு முடிகொடுத்து க்ருதக்ருத்யனாய், ப்$_3$ரஹ்மாதி$_3$கள் புஷ்பவ்ருஷ்டியும் ஸ்தோத்ரமும் பண்ண வீரஶ்ரீ தோற்ற ஶ்ரமஹரமான வடிவோடே நின்றநிலை.

(மதுரமாவண்டுபாட) வினையற்றவாறே ஆடல்பாடலுக்கு இடங்கொடுத்தபடி. சிலர் பாடினால் ஆடுவாரும் வேணுமே; மயில்கள் ஆடப்புக்கன. (மாமயில்) ஒருமயில் தோகை விரித்தால் திருச்சோலைக்கு அணுக்கனிட்டாப் போலிருக்கை. ருஷிகள் கொண்டைக்கோல் கொண்டாடுகை தவிர்ந்து மயில்கள் ஆடப்புக்கன. குரங்குகள் கூத்தாட்டாதல், இவற்றின் கூத்தாட்டாதல், என்றும் திர்யக்$_3$யோநிகளுக்கு நிலமாகை. (வண்டுபாடமாமயிலாட) ஸ்ரீவைகுண்ட$_2$நாத$_2$ன் வரியபெருமாளானவாறே நித்யஸூரிகளும், வண்டும் மாமயில்களுமானபடி. "ஸர்வை: பர்வ்ருதோ தே$_3$வைர் வாநரத்வமுபாக$_3$தை:" (ரா. யு 114-17) என்னக்கடவதிறே. ராஜா வெள்ளைசட்டையிட்டால் அடியார் கறுப்புச்சட்டை யிடுமித்தனையிறே.

(அரங்கத்தம்மான்) பெரியகோயிலிலே கண்வளர்கிற பரமசேஷியுடைய. (திருவயிற்றுதரபந்தம்) ஆப$_4$ரணத்துக் காப$_4$ரணம். பெற்றவயிற்றுக்குப் பட்டங்கட்டினபடி. (என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே) என்னெஞ்சினுள்ளே அழகு பாண்டேறா நின்றதே; நெஞ்சம் நாடிறே (திருவாய் 8-6-4 ); அகலநின்றாலும் பசையில்லை. இப்பாட்டில் த$_3$ஶரத$_2$ாத்மஜன் படியும் இங்கே உண்டென்கிறார். (4)

---

அவ. - நாலாம்பாட்டு.(சதுரமித்யாதி$_3$) (கட்டளைப்பாகு) லங்காத$_4$சவரணையோடே கூடியிருக்கை. கி$_3$ரிது$_3$ர்க்க$_3$ம் வநது$_3$ர்க்க$_3$ம் ஜலது$_3$ர்க்க$_3$ம்; ஆக து$_3$ர்க்க$_3$த்ரயம். அவன் மநுஷ்யனானால் இவர்கள் திர்யக்காக வேண்டுவானென் னென்ன அருளிச்செய்கிறார் (ராஜேத்யாதி$_3$). (பெற்றவயிறு) ஸூலையைப் படைத்தது. (அகல நின்றாலும்) தாம் அகல

5. பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத்தன்
வாரமாக்கிவைத்தான் வைத்ததன்றி என்னுள் புகுந்தான்
கோரமாதவம்செய்தனன்கொல்அறியேன்
அரங்கத்தம்மான்திரு
வாரமார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே.

அவ. – ஐந்தாம்பாட்டு. எனக்குப் பற்றாசான பெரியபிராட்டியாரிருக்கிற திருமார்புகிடீர் என்னை ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்கொண்டதென்கிறார்.

வ்யா.– (பாரமாய) ஸர்வஶக்தியான ஸர்வேஶ்வரனே தள்ளுமிடத்திலும் ஒருநிலைநின்று தள்ளவேண்டும்படியிருக்கை; ஸம்ஹரிப்பதும் நரகத்திலேயாய் ஸ்ருஷ்டிப்பதும் நரகத்திலேயாயிருக்கை.

(பழவினை) காலமநாதி₃; ஆத்மாவோ நித்யன்; அசித் ஸம்ஸர்க்க₃முமன்றே யுண்டிறே. இக்காலமெல்லாம் கூடக் கவடுபூரித்ததாயிருக்குமிறே. "ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி" (கீ₃தா சரமஶ்லோகம் 18 –66) என்றவன்றானே தள்ள வேண்டும்படியிருக்கை.

(பற்றறுத்து) விரகராயிருப்பார் அடியறுத்து நெடுஞ்சுவர் தள்ளுமாபோலே ஸவாஸநமாகப் போக்கி. நித்யஸூரிகளுக்குப் பாபஶங்கையுண்டாகிலும் இவர்க்கில்லாதபடிபண்ணி.

---

நின்றாலும் ப்ரயோஜநமில்லை. அங்கும் வந்து ஸஞ்சரிக்குமென்றபடி.

(என்னை) பாபத்துக்குப் போக்கடியறியாத வென்னை. பாபம்படும் ஆகரமான என்னையென்றுமாம். "அக4மஹோத3தி4:"(?) (தன் வாரமாக்கி வைத்தான்) தான் என்றால் பக்ஷபதிக்கும்படி பண்ணினான். என் கார்யம் தனக்குக் கூறாக என்பேரிலே தனக்கு இருப்பென்று தன் பேரிலே எனக்கிருப்பாக்கினபடி, அன்றியே, விஷயாந்தரங்களை விட்டுத் தன்னையே கூறாகப் பற்றும்படி பண்ணினான். (வைத்தான்) ஆச்சந்தாநச் சாபம் வைத்தான். (வைத்ததன்றி) இந்த நன்மைகளுக்கு மேலே, (என்னுள் புகுந்தான்) பின்னையும் தன்னாற்றாமையாலே, விடாய்த்தவன் தடாகத்தை நீக்கி உள்ளே முழுகுமாப்போலே, என்னுள்ளம் புகுந்தான். வாலிபுக்கவிடத்தே மலையிட்டடைத்து, மஹாராஜர் இருந்து குறும்புசெலுத்தினாப் போலே யாகவொண்ணாதென்று என் ஸ்வரூபஜ்ஞாநம் குலையாதபடி என்னெஞ்சிலே வந்து புகுந்தான். "அநந்யமநந்ய:" (முண்ட3க 3-1-1) என்கிறபடியே இத்தோடொட்டிருக்குமவனுக்கும் இத்தாலல்லது செல்லுகிறதில்லை என்கிறது.

(கோரமாதவமித்யாதி3) இப்பேற்றுக்கடி என்னென்று பார்த்தார். இந்த்3ரியங்களை யொறுத்து மஹாதபஸ்ஸைப் பண்ணினேனோ அறிகிறிலேன்; நானறியவொன்றுமில்லை. இப்படி பங்கிப்பானென்னென்னில்; பெற்றபேறு அப்படிப்பட்டார்க்குக் கிடைக்குமதாகையாலே. அவன்றானே நதீ3தீரத்திலே கிடந்து தபஸ்ஸு பண்ணினானோ அறிகிறிலேன். கே4ாரமான தபஸ்ஸாகிறது – அத்தலைக்காகத் தம்மையழிய மாறின கார்யவுடையாரைப் போலே இருக்கை. "எந்நன்றி செய்தேனா என்னெஞ்சில் திகழ்வதுவே" (திருவாய் 10-6-6)

என்னுமாப்போலே.

(அரங்கத்தம்மான்) இப்பேற்றுக்கு ஆற்றங்கரையைப் பற்றிக்கிடந்து தபஸ்ஸு பண்ணினாலும் அவனாயிருந்தது. இச்சீரிய பேற்றுக்கு வேறு உபாயமுண்பாகமாட்டாதே.

(திருவாரமார்பதன்றோ) பெரியபிராட்டியாரையும் ஹாரத்தையுமுடைத்தான மார்வன்றோ. தமக்குப் பற்றாசாகத் தாய் நிழலிலே ஒதுங்குகிறார். இவனைக் குறித்து "தேந மைத்ரீ ப$_4$வது" (ரா.ஸு 21-20) என்றும், அவனைக்குறித்து "ந கஶ்சிந்நாபராத்$_4$யதி" (ரா.யு 116-44) என்றும் சிறையிலே யிருந்தே சேரவிடப்பார்க்கிறவள், மார்பிலே இருந்தால் சேரவிடச் சொல்ல வேணுமோ? அழகிய மார்விலாரம். ஆரத்துக்கு அழகு கொடுக்கவற்றாயிருக்கை. ஆரம் அழகை மறைக்கைக்கு உடலாமித்தனையிறே. "ஸர்வபூ$_4$ஷண பூ$_4$ஷார்ஹா:" (ரா.கி. 3-15) என்னுமாப்போலே.

(அடியேனை) முன்பெல்லாம் கூலிச்சேவகரைப் போலே அழகுக்குத் தோற்ற அடிமை; இது பிறந்துடையவடிமை. முந்துற "தூ$_3$தோ ராமஸ்ய" (ரா.ஸு 36-2) என்றவன், பிராட்டி கடாக்ஷம் பெற்றவாறே "தா$_3$ஸோSஹம் கோஸலேந்த்$_3$ரஸ்ய" (ரா.ஸு 42-34) என்றானிறே. (ஆள்கொண்டது) இழந்த ஶேஷத்வத்தைத் தந்தது.

(அடியேனையாட்கொண்டதே) ராஜ்யமிழந்த ராஜபுத்ரனை யழைத்து முடிசூட்டுமாப்போலே, அழகிலே அழுந்தின என்னை அவன் கு$_3$ணங்கிடீர் பிழைப்பித்ததென்கிறார். அழகிலே அழுந்தினாரை கு$_3$ணத்தைக்காட்டிப் பிழைப்பிக்கலாம்;

கு$_3$ணத்திலே அழுந்தினார்க்கு கு$_3$ணமே வேணும், நீரிலே அழுந்தினார்க்கு நீரையிட்டுப் பிழைப்பிக்கவிடுமித்தனையன்றோ உள்ளது.

இப்பாட்டால் – அந்தர்யாமிப்$_3$ராஹ்மணத்தில் சொல்லுகிற படியே ஸர்வவ்யாபகத்வஶக்தியும் இங்கே உண்டென்கிறார்.(5)

**துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் அஞ்சிறைய**
**வண்டுவாழ் பொழில்சூழ் அரங்கநகர் மேயவப்பன்**
**அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலம்எழுமால்வரை**
**முற்றும்**
**உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக்கொண்டதே. 6.**

**அவ.–** ஆறாம்பாட்டு. ஸர்வலோகத்தையும் அமுதுசெய்தருளின கண்ட$_2$த்தினழகு என்னையுண்டாக்கிற் றென்கிறார். திருமார்பினழகு திருக்கழுத்திலே ஏறிட்டதென்னவுமாம்.

---

அரு. – அஞ்சாம்பாட்டு. (பாரமாயவித்யாதி$_3$) (பாரமாய) வினையினுடைய ப$_3$ாரஶூன்யமாதல்; க்ரௌர்யமாதல். இவற்றை வாக்யத்$_3$வயத்தாலே அருளிச்செய்கிறார் (ஶர்வஶக்தித்யாதி$_3$). பழமையேதென்ன அருளிச்செய்கிறார் (ஆத்மாவித்யாதி$_3$). வாரம் – ஸ்நேஹமாதல், கடமையாதல். இவனிறுக்கு மிறையைத் தான் இறுக்கிறேனென்று தன்பேரிலே ஏறிட்டுக் கொள்ளுகை. (சாபம்) குட்டி. ஶத்ருக்கள், விரோதி$_4$களை அறுக்குமென்று ஸந்தாநத்துக்கு ஒருகுட்டி வைக்குமாப்போலே என் விரோதி$_4$யைப் போக்கி ஸ்வரூபம்

**வ்யா.** - (துண்டமித்யாதி3) கலாமாத்ரமாய் வளுத்திருந்துள்ள பிறையை ஜடை3யிலேயுடையனான ருத்3ரன் தனக்குப் பிதாவுமாய் லோககு3ருவுமாயிருந்துள்ள ப்3ரஹ்மாவினுடைய தலையை யறுக்கையால் வந்த பாபத்தைப் போக்கினவன். சுமையராயிருப்பார் சும்மாட்டுக்குள்ளே தாழைமடலைச் சொருகுமாப்போலே, ஸாத4கனாயிருக்கச் செய்தே ஸுக2ப்ரத4ாநனாக அபி4மாநித்திருக்குமாய்த்து. ஆனாலும் ஆபத்து வந்தால் அவனல்லது புகலில்லையே. சந்த்3ரனுடைய க்ஷயத்தைப் போக்கினானென்றுமாம். அவனுடைய து3ரிதத்தைப் போக்கினாப்போலே தம்முடைய து3ரிதத்தையும் போக்குமென்று கருத்து.

(அஞ்சிறையவண்டுவாழ் பொழில் சூழ் அரங்கநகர்மேய வப்பன்) லோகத்தில் ப்ரத4ாநரானவர்கள் ப்3ரஹ்மஹத்யையைப் பண்ணி அலைந்துகொடுகிடக்கப்புக்கவாறே தான் கடக்கநிற்க வொண்ணாதென்று அவர்களுடைய ரக்ஷணார்த்த2மாகக் கிட்டவந்து கண்வளர்ந்தருளுகிற உபகாரகன். அழகிய சிறகை உடைத்தான வண்டுகள் வாழாநின்ற சோலைசூழ்ந்த பெரிய கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பிதாவானவன்.

நமியாதபடி வைத்தான் என்றபடி. திரு-அழகாகவுமாம். "ஸௌந்த3ர்யம் அந்தராயம்" (முமுக்ஷுப்படி-182) என்கிறபடியே கைங்கர்யவிருத்3த4மான அழகிலே ஈடுபட்ட என்னை, ஶ்ரிய:பதித்வகு3ணத்தைக் காட்டிமீட்டாப்போலே, ஶ்ரிய:பதித்வகு3ணத்திலே அகப்பட்டாரை ஸௌந்த3ர்யமாகிற அழகைக் காட்டி மீட்கலாகாதோ வென்ன "மார்பதன்றோ" என்ற உறைப்பைப்பற்ற அருளிச்செய்கிறார் (அழகிலே அழுந்தினாரித்யாதி3).

(வண்டு வாழ்பொழில்) வண்டுகள் அவன்பக்கல் செல்லாது, திருச்சோலையின் பே4ாக்3யதையிலே இளமணல் பாய்ந்து கால் வாங்கமாட்டாதே நிற்கும்; அவ்வண்டுகளைப் போலே தம்மை யநுப4விப்பித்து விடாய் கெடுத்தானென்கிறார்.

(அண்டரண்டமித்யாதி3) அண்ட3ாந்தர்வர்த்திகளுடைய அண்ட3ம், பகிரண்டம் – புறவண்ட3ம், அத்3விதீயமான மஹாப்ருதி2வீ, பூ4மிக்கு ஆணியடித்தாப்போலேயிருக்கிற ஏழுவகைப்பட்ட குலகி3ரிகள், ஒன்றொழியாமே ஆடிக்காற்றில் பூளைபோலே பறந்து திருவயிற்றிலே புகும்படியுண்ட கழுத்துக்கிமர். இவற்றைத் தனித்தனியே சொல்லுவானென் னென்னில்; தனித்தனியே சொல்லுகை பே4ாக்3யமாயிருக்கை யாலே.

(முற்றுமுண்டகண்டங்கண்டீர்) பெரியபெருமாள் திருக் கழுத்தைக் கண்டால் ப்ரளயாபத்திலே ஜக3த்தை எடுத்துத் திருவயிற்றிலே வைத்தமை தோற்றாநின்றதாய்த்து. விடுகாது தோடிட்டு வளர்ந்ததென்று தெரியுமாப்போலே.

(அடியேனை உய்யக்கொண்டதே) முன்பு பெற்ற கைங்கர்யத்துக்கு விச்சே2த3ம் பிறவாதபடி நோக்கிற்று; என்னை ஸம்ஸாரத்தில் ஒருநாளும் அகப்படாதபடி பண்ணிற்று.

இப்பாட்டால் ஆபத்ஸக2னான ஸர்வேஶ்வரன்படியும் இங்கே உண்டென்கிறார். (6)

அரு. – ஆறாம்பாட்டு. (துண்டவித்யாதி3) ஸாத4கவேஷம் தோற்ற ஜடை3யை த4ரிக்கிறவனுக்கு சந்த்3ரன் வேணுமோ வென்ன அருளிச்செய்கிறார் (சுமையராமிருப்பாரித்யாதி3).

**7) கையினார் சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்**
**மெய்யினார் துளபவிரையார்கமழ் நீள்முடி எம்**
**ஐயனார் அணியரங்கனார் அரவினணைமிசை**
**மேயமாயனார்**
**செய்யவாய் ஐயோ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே.**

**அவ.** – ஏழாம் பாட்டு. திருவத$_3$ரத்திலே அகப்பட்டபடி சொல்லுகிறார்; நீஞ்சப்புக்குத் தெப்பத்தை யிழந்தேனென்னு மாப்போலே.

**வ்யா.** – (கையினாரித்யாதி$_3$) வெறும்புறத்திலே படவடிக்கவல்ல கையிலே அழகு நிறைந்து சுரியையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யம், ப்ரதிபக்ஷத்தின் மேலே அனலை யுமிழா நின்றுள்ள திருவாழி, இவற்றை யுடையராயிருக்கை.

ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்குச் சுரி ஸ்வப$_4$ாவமானாப்போலே திருவாழியாழ்வானுக்கும் ப்ரதிபக்ஷத்தின் மேலே அனலுமிழ்கை ஸ்வப$_4$ாவம். திருக்கோட்டியூரிலே அநந்தாழ்வான், ப$_4$ட்டரை, "ஸ்ரீவைகுண்ட$_2$நாத$_2$ன் த்$_3$விபு$_4$ஜனோ, சதுர்ப்பு$_4$ஜனோ என்ன; இருபடிகளுமடுக்குமென்ன, இரண்டிலுமழகிதேதென்ன, த்$_3$விபு$_4$ஜனாகில் பெரியபெருமாளைப் போலேயிருக்கிறது, சதுர்ப்பு$_4$ஜனாகில் பெருமாளைப் போலேயிருக்கிறது" என்றார்.

(நீள்வரை) மலையைக் கடலை ஒப்பாகக் சொல்லுமித்தனையிறே. நீட்சி – பே$_4$ாக்$_3$யதாப்ரகர்ஷம். பச்சை மாமலைபோல் மேனி(திருமாலை–2); அதுக்கு மேலே ஒப்பனையழகு.

(துளபவிரையார் கமழ்நீண்முடி) பரிமளம் மிக்கிருந்துள்ள திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதமாய் ஆதி$_{4}$ராஜ்ய ஸூசகமான திருவபி$_{4}$ஷேகத்தை உடையருமாய். (எம்மையனார்) உறவு தோற்றுகை. எனக்கு ஜநகரானவர்.

(அணியரங்கனார்) ப்ராப்தவிஷயமாயிருக்கக் கடக்கவிராதே ஸம்ஸாரத்துக்கு ஆப$_{4}$ரணமான கோயிலிலே வந்து அண்ணியருமாயிருக்கிறபடி.

(அரவினணைமிசை) ரத்நங்களையெல்லாம் தங்கத்திலே புதைத்துக் காட்டுமாப்போலே தன்னழகுதெரியத் திருவனத்தாழ்வான் மேலே சாய்த்து காட்டுகிறபடி. (மேயமாயனார்) மின்மினி பறக்கிறபடி. "ஸ மயா போ$_{3}$தி$_{4}$த: ஶ்ரீமாத்" (ரா.ஸு 38–25) எல்லார்க்கும் ஒன்றிலே சாய்ந்தவாறே பொல்லாங்குகள் தெரியும்; இங்குப் பழையவழகும் நிறம்பெறும்.

(செய்யவாய்) ஸ்த்ரீகளுடைய பொய்ச்சிரிப்பிலே துவக்குண்டார்க்கு இச்சிரிப்புக் கண்டால் பொறுக்க வொண்ணுமோ.

(ஐயோ) திருவத$_{4}$ரமும் சிவப்பும் அநுப$_{4}$விக்க அரிதாய் "ஐயோ!" என்கிறார். (என்னை) பண்டே நெஞ்சு பறிகொடுத்த

---

அரு. – ஏழாம்பாட்டு. (கையினார்த்யாதி$_{3}$) இங்கு, தெப்பம் அநுப$_{4}$வபரிகரமான நெஞ்சு. (படவடிக்கை) ஈடுபடுத்துகை. "சுரி" என்று ஸுஷிரமாய், அத்தால் துளையென்றபடி. "சங்கு" என்றவிடத்தில் கடைக்குறைத்தலாய் "சங்கனல்"

என்னை அந்யாயம் செய்வதே! என்று கூப்பிடுகிறார். (என்னை) கல்லை நீராக்கி, நீரையும் தானே கொண்டது. இப்பாட்டில் ஸ்ரீவைகுண்ட$_2$நாத$_2$ன்படியும் இங்கே காணலாமென்கிறார். (7)

8) பரியனாகிவந்த அவுணனுடல்கீண்ட அமரர்க்கு
அரியஆதிப்பிரான் அரங்கத்தமலன் முகத்து
கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி
நீண்டஅப்
பெரியவாயகண்கள்என்னைப்பேதைமை செய்தனவே.

அவ. – எட்டாம்பாட்டு. திருக்கண்கள் என்னை அறிவுகெடுத்த தென்கிறார்.

---

என்றாய், "களலாழி" என்று- நெருப்பையுமிழ்கிற திருவாழியென்றபடி. பெரியபெருமாள் சதுர்ப்பு$_4$ஜராயிருக்கச் செய்தேயும் ஆபாதத: மேலெழ த்$_3$விபு$_4$ஜராய்த் தோற்றுகிறாப் போலே, பரமபத$_3$நாத$_2$னும் சதுர்ப்பு$_4$ஜனாயிருக்கச் செய்தேயும் ப்ரமாணாந்தரங்களாலே த்$_3$விபு$_4$ஜனாய்த் தோற்றினானாகில், பெரியபெருமாள் மறைத்துக் காட்டுகிறாப்போலே ப்ரமாணங்களும் மறைத்துச் சொல்லுகிறதென்று ப$_4$ட்டருக்குக் கருத்து. கிடையழகு வாசாமகோ$_3$சரமாய் ஆஶ்சர்யமாயிருக்கையாலே "இத$_3$ம், இத$_3$ம்" என்னப்போகாமல் மின்மினி பறக்கிறதென்றபடி. நெஞ்சுபறிகொடுக்கை இரண்டாம்பாட்டிலே; அங்கே கல்லான நெஞ்சை நீராக்கி, இங்கே அந்த நீரையும் அபஹரித்ததென்றபடி.

**வ்யா. –** (பரியனாகி வந்த) பு4க3வத்3கு3ணங்களை அநுஸந்தி4த்து நைந்திராமே, ஸௌஷத்வத்தையறிந்து மெலிந்திராமே, ஸர்வேஶ்வரனை ஆசைப்பட்டுத் தளர்ந்தவுடம்பாயொசிந்திராமே. (பரிய) நரஸிம்ஹத்துக்கும் பிற்காலிக்க வேண்டும்படியிருக்கை. ஊட்டியிட்டு வளர்த்த பன்றி போலே உடம்பை வளர்த்தானித்தனை. (வந்த) இப்போது தாம் வயிறுபிடிக்கிறார்.

(அவுணனுடல்கீண்ட) நரஸிம்ஹத்தினுடைய மொறாந்த முக2மும், நாமடிக்கொண்ட உதடும், செறுத்து நோக்கின நோக்கும், குத்தமுறுக்கினகையும், கண்டபோதே பொசுக்கின பன்றிபோலே மங்குநாரைக் கிழிக்குமாப்போலே கிழித்தபடி.

(அமரர்க்கரிய ஆதிப்பிரான்) தே3வர்களுக்கு உத்பாத3கனான மாத்ரமே; கையாளனாய் நிற்பது ஆஶ்ரிதர்க்கு. சிறுக்கனுக்கு உதவி நிற்கிற நிலைதன்னிலே ப்3ரஹ்மாதி3களுக்குப் பரிச்சே2தி3க்கவொண்ணாதபடி நிற்கிற ப்ரத4ாநன். "க்வாஹம் ரஜ:ப்ரக்ருதிரீஶ! தமோதி4கேடஸ்மிந் ஜாதஸ் ஸுரேதரகுலே க்வ தவாநுகம்பா। ந ப்3ரஹ்மணோ ந ச பு4வஸ்ய ந வை ரமாயா யோ மேர்஽ப்பித: ஶிரஸி பத்3மகரப்ரஸாத3:॥" (பு4ாக3வதம் 7 – 9 –26). (ஆதிப்பிரான்) தான் முற்கோலி உபகரிக்குமவன். (பிரான்) ப்ரஹ்லாத3னுக்கு எளியனான நிலையும் ப்3ரஹ்மாதி3களுக்கு அரியனான நிலையும் இரண்டும் தமக்கு உபகாரமாயிருக்கிறது.

(அரங்கத்தமலன்) எல்லார்க்குமுதவும்படி கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகையாலே வந்த ஸௌத்3தி4. ஒருக்கால்

தோற்றிப்போதல், அவதாரம் போலே தீர்த்த$_2$ம்ப்ரஸாதி$_3$த்துப் போதல் செய்யாமையாலே வந்த ஸாத்$_3$தி$_4$யாகவுமாம்.

(முகத்து) அவனுடைய முக$_2$த்து. (கரியவாகி) விடாய்த்தார் முக$_2$த்திலே நீர்வெள்ளத்தை வெட்டிவிட்டாப்போலே யிருக்கை.

(புடைபரந்து) கடலைத் தடாகமாக்கினாப்போலே இடமுடைத்தாயிருக்கை. (மிளிர்ந்து) திரைவிசிக் கரையாலும் வழிபோக வொண்ணாதிருக்கை. (செவ்வரியோடி) ஸ்ரிய: பதித்வத்தாலும் வாத்ஸல்யத்தாலும் சிவந்திருக்கை. (நீண்ட) செவியளவும் அலையெறிகை.

(அப்பெரியவாய கண்கள்) பின்னையும் பே$_4$ாக்தாவின் அளவன்றிக்கே இருக்கையாலே "அப்பெரியவாய கண்கள்" என்கிறார். "இது" என்னவொண்ணாதே பரோக்ஷ நிர்த்தே$_3$ஶம் பண்ணவேண்டும்படியிருக்கை. (என்னை) பெரியமனிச்சன்கிடீர் நான். என் வைத$_3$க்$_3$த்$_4$யத்தைப் பறித்துப் பொகட்டு மௌக்$_3$த்$_4$யத்தைத் தந்தன. ஒருவன் எய்தத்தை மற்றவனும் எய்யுமாப்போலே.

(பேதைமை செய்தனவே) ராமஸரம்போலே முடிந்து பிழைக்க வொட்டுகிறனவில்லை. இத்தால் நரஸிம்ஹாவதாரத்தின் படியும் இங்கே யுண்டென்கிறார். (8)

அரு. - எட்டாம்பாட்டு(*பரியனுகி இத்யாதி$_3$*) (ஆதி) காரணபூ$_4$தனாதல்; ப்ரத$_4$ாநனாதல்; முந்துறவாதல்; ஆக மூன்றர்த்த$_2$ம். (பெரிய மனிச்சன்) ஒன்றுக்கும் கரையாத கல்நெஞ்சன். கண்கள் என்கிற த்$_3$விவசனத்தைப் புந்றவருளிச்செய்கிறார் (ஒருவனெய்ய வித்யாதி$_3$).

**ஆலமாமரத்தினிலை மேல் ஒருபாலகனாய்**
**ஞாலமேழும் உண்டான் அரங்கத்தரவினணையான்**
**கோலமாமணியாரமும் முத்துத்தாமமும்**
**முடிவில்லதோரெழில்**
**நீலமேனி ஐயோ! நிறைகொண்டது என் நெஞ்சினையே.௯.**

**அவ.** – ஒன்பதாம்பாட்டு. ஊறுபூசல் போலே திருமேனியின் நிறமானது எல்லாவற்றையுங்கூடக் கொண்டுவந்து என்னெஞ்சைக் கொள்ளைகொண்டதென்கிறார்.

**வ்யா.** – (ஆலமாமரத்தினித்யாதி$_3$) பெரிய ஆலமரத்தினுடைய சிற்றிலையிலே யஶோத$_3$ாஸ்தநந்த$_4$யமும் பெரியதென்னும்படி அத்$_3$விதீயனான பா$_3$லனாய். (ஒரு பாலகனாய்) யஶோத$_3$ாஸ்தநந்த$_4$யனான க்ருஷ்ணனும் முரணித்திருக்கும்படி இவனுடைய பா$_3$ல்யம் செம்பால்பாயா நிற்கும்.

(ஞாலமித்யாதி$_3$) சிறுப்ரஜைகள் புரோவர்த்தி பத$_3$ார்த்த$_2$ங்களை எடுத்து வாயிலிடுமாப்போலே பூ$_4$மிப்பரப்படைய வாயிலே வைத்தானாய்த்து, பிள்ளைத்தனம். ப்ரளயத்தில் தன் அக$_4$டிதக$_4$டநத்தோடொக்கும் – என்னை அகப்படுத்தினபடியும்.

(அரங்கத்தரவினணையான்) ஸம்ஸாரப்ரளயத்தினின்றும் எடுக்கக் கிடக்கிறபடி; அந்த ஆலினிலையில் நின்றும் இங்கே வரச்சருக்கின வித்தனை காணும். அந்தவுறவொன்றுமே இவரச்சங் கெடுக்கிற வித்தனை காணும் இப்ரமாத$_3$த்தோடே கூடின செயலைச் செய்தானென்று ப$_4$யப்படுமவர்கள் அச்சம் கெடும்படி கிடக்கிறவிடம்.

(அரவினணையான்) ப்ரளயத்தில் தன்வயிற்றிலே புகாவிடில் ஜக3த்து ஜீவியாதாப்போலே, ஸம்ஸாரிகள் தன்முக2த்தே விழியாவிடில் தனக்குச் செல்லாதானபடி.

(கோலமாமணியாரமும்) அழகியதாய்ப் பெருவிலையனாயிருந்துள்ள ரத்நங்களாலே செய்யப்பட்ட ஆரமும். (முத்துத் தாமமும்) முத்துமாலையும். (கோலம்) இது பெருமாளைச் சொல்லுகிறது.

(முடிவில்லதோர் எழில் நீலமேனி அவத்4 காண வொண்ணாத அழகையுடைய நெய்த்த திருமேனி. (ஐயோ) பச்சைச்சட்டையிட்டுத் தனக்குள்ளத்தையடையக் காட்டி எனக்குள்ளத்தையடையக் கொண்டான். (நிறை கொண்ட தென்னெஞ்சினையே) எனக்கு அகவாயில் க3ாம்பீ4ர்யத்தைப் போகவழித்தது.

இப்பாட்டால் வடதளஶயநமும் பெரியபெருமாள்பக்கலிலே உண்டென்கிறது.

---

அரு. - ஒன்பதாம்பாட்டு. (ஆலமாமரமித்யாதி3) (செம்பால் பாய்கை) கேவல ரக்தப்பசையாயிருக்கை. பத3ச்சேர்த்திக்குத் தாத்பர்யத்3வயமருளிச்செய்கிறார் (ஸம்ஸாரப்ரளயேத்யாதி3 வாக்யத்3வயத்தாலே). (அச்சம் கெடுகை) கீழே ஸமுத்3ரமாய், மேலே ஆலிலையாயிருக்கையன்றிக்கே கோயிலிலே திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகை. (ஆரம்) பதக்கம். "கோலம்" என்றது - ஆப4ரணச்சேர்த்தி அழகியமணவாளப்பெருமாளுக்கு. நிறை - நிறைவெல்லாமென்னுதல்; அடக்கமென்னுதல்.

**10) கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ**
**யுண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை**
**அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக்**
**கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே.**

அவ. – நிக$_3$மத்தில், இவ்வளவும் ஜ்ஞாந ஸாக்ஷாத்காரம்; மேல் லோகஸாரங்க$_3$மஹாமுனிகள் தோளில் வந்துபுகுந்து விண்ணப்பஞ் செய்கிறார்; பெரியபெருமாளழகைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவென்கிறார்.

வ்யா. – (கொண்டல்வண்ணனை) தாபத்ரயத்தாலே விடாய்த்த தம் விடாய் தீரும்படியாய் "அத்$_3$ரௌ *ஶயாளுரிவ பீ*தள காளமேக$_4$:" (ர. ஸ்த 1-82) என்கிறபடியே வர்ஷுக$_2$மான காளமேக$_4$ம் போலேயிருக்கிற திருநிறத்தையுடையவனை. பன்னீர்க்குப்பிபோலே உள்ளுள்ளவையெல்லாம் புறம்பே நிழலிட்டபடி.

(கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்) இடையனாய் வெண்ணெய் உண்ட திருப்பவளத்தை உடையவனை. சக்ரவர்த்தித் திருமகனாகில் வெண்ணெயுண்ணவொட்டார்கள் என்று கருத்து. (கோவலன்) ஆபி$_4$ஜாத்யம்; பெருமாளுக்குக் கட்டுண்பது அடியுண்பதாகக் கிடைக்குமோ?

(வெண்ணெயுண்டவாயன்) களவு கண்டு ஒளித்து வந்து கிடக்கிறவன்; பெரியபெருமாள் கொறுட்டை மோந்து பார்த்தால் இப்போதும் வெண்ணெய் நாறாநிற்கும்.

(என்னுள்ளம் கவர்ந்தானை) என்னெஞ்சை

அபஹரித்தவனை. கோவலனாய் வெண்ணெயுண்டாப்போலே கொண்டல்வண்ணனாய் என்னுள்ளங் கவர்ந்தவனை. யஶோதை3ப் பிராட்டியுடைய வெண்ணெயிலே பண்ணின ஶ்ரத்3தை4யை என்னெஞ்சிலே பண்ணி பு4ஜித்தவனை. வைத்த குறியழியாதிருக்க வெண்ணெய் குடிபோனாப்போலேயாய்த்து இவருடம்பிருக்க அகவாய் குடிபோனபடி.

(அண்டர்கோன்)திருவாய்ப்பாடியிலிடைக்குலத்துக்கு நிர்வாஹகனென்னுதல்; அண்ட3ாந்தர்வர்த்திகளான ஆத்ம வர்க்க3த்துக்கு நிர்வாஹகனென்னுதல். (அணியரங்கனென்னமுதினை) தே3வர்களுடைய உப்புச்சாறு போலன்று இவருடைய அம்ருதம்.

(என்னமுதினை) ப்3ரஹ்மாதி3களுக்கு முதலியாயிருக்கும்; எனக்குச் சாகாமல் காக்கும் அம்ருதமாயிருக்கும். (கண்டகண்கள்) சுவையறிந்த கண்கள் ஶ்ரவணேந்த்3ரிய மாத்ரமன்றியே விடாய்தீரக் கண்ட கண்கள்.

(மற்றொன்றினைக் காணாவே) "ப4ாவோ நாந்யத்ர க3ச்ச2தி" (ரா. உத் 40-15) போலே கண்களுக்குப் பச்சையிட்டாலும் வேறொரு அர்ச்சாவதாரம் அவதாரவிஶேஷம் இவற்றை இப்படி விரும்பி பே4ாக்3யமென்று கருதாது. காட்சியொழிய வேறொரு ப2லம் சொல்லாதுவிட்டது ப2லமும் காட்சியேயாகையாலே. முக்தப்ராப்யமென்று ஒரு தே3ஶவிஶேஷத்திலே போனாலும் *ஸதா3 பஶ்யந்தி (ருக்3வேத3ம் 1-2-7,ஸாமவேத3ம் 3-18-2-4)யிறே.

தம்மைச் சொல்லுதல், பாட்டுக்கு ஸங்க்2யை சொல்லுதல்

செய்யில் கரைமேலே நின்ற அல்லாத ஆழ்வார்களோபாதியாவர். அஸ்தமிதாந்யப4ாவமாம்படி அழகிலே ஈடுபட்டுத் தம்மை மறந்தார். "நேபஜநம் ஸ்மரந்நித3ம் ஶரீரம்" (ச2ாந் 8-12-3) என்கிறபடியே முக்தப்ராப்யமான புருஷார்த்த2த்தை அநுப4வித்தாரென்கையாலே எல்லாம் அவன் சொல்லேயாய் விட்டது.

இப்பாட்டில் க்ருஷ்ணனுடையபடியும் இங்கே உண்டென்கிறார்.(10)

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்2யாநம் முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

அரு. - பத்தாம்பாட்டு. நிக3மத்தில் (கொண்டலித்யாதி3) வண்ணம் நிறமாதல், ஸ்வப4ாவமாதல், ஔத3ார்ய கு3ணமாதல். இத்தையருளிச்செய்கிறார் (பனிநீரித்யாதி3). பத3ாந்வயத்தோடேயாதல், இருந்தபடியேயாதல் இவற்றைவாக்யத்3வயத்தாலே அருளிச்செய்கிறார் (கோவலனாயித்யாதி3), (பச்சைமிருகை) இவரையொழிந்த வர்கள் ஸ்வஸ்வகு3ணங்களைக்காட்டி வஶீகரிக்கப் பார்த்தாலுமென்றபடி. ஸங்க்2யைசொல்லாமைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (நேபஜநம் ஸ்மரந் நித்யாதி3).

அமலனாதிபிரான் வ்யாக்யாநாரும்பதம் முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

அழகியமணவாளப்பெருமாள்நாயனார்

அருளிச்செய்த

## அமலனாதிபிரான் வ்யாக்$_2$யாநம்

### அவதாரிகை

வேத$_3$ம் போலே முதலாழ்வார்கள் மூவரும் பரத்வத்திலேமண்டி அர்ச்சையையும் தொட்டுக் கொண்டு போந்தார்கள்; ஸ்ரீவால்மீகிப$_4$க$_3$வானைப் போலே ஸ்ரீகுலசேகரப்பெருமாள் ராமாவதாரத்திலே ப்ரவணராய் அர்ச்சாவதாரத்தையும் அநுப$_4$வித்தார்; ஸ்ரீபராஶரப$_4$க$_3$வானையும், ஸ்ரீவேத$_3$வ்யாஸ ப$_4$க$_3$வானையும்போலே, நம்மாழ்வாரும், பெரியாழ்வாரும், ஆழ்வார்திருமகளாரும் க்ருஷ்ணாவதாரத்திலே மண்டி அர்ச்சாவதாரத்தையும் அநுப$_4$வித்தார்கள்; திருமழிசைப்பிரான் "நான்முகனை நாராயணன் படைத்தான்" (நான். திருவ-1) என்று தொடங்கி, "இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்" (நான். திருவ-96) என்று தே$_3$வதாந்தரபரத்வ நிரஸநத்திலே தத்பரராயிருந்தார்.

திருமங்கையாழ்வார், "தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு, ஆராவமுதமங்கெய்தி, அதில்நின்றும் வாராதொழிவதொன்றுண்டே, அது நிற்க ஏரார்முயல்விட்டுக் காக்கைப்பின்போவதே" (சிறிய திருமடல்) என்று பரத்வத்தைக் காற்கடைக் கொண்டு, அர்ச்சாவதாரத்திலே இழிந்து அது

தன்னிலும் ஓரிடத்திலிரண்டிடத்திலன்றிக்கே, "நெருநற்கண்டது நீர்மலேயின்றுபோய்க் கருநெல் சூழ் கண்ணமங்கையுள் காண்டும்" (பெரிய திரு 10–1–1) என்றிப்படி தானுகந்தவூரெல்லாம் தன்தாள் பாடிப்(திருநெடு–6)பரபரப்பாய்த் திரிந்தார். பெரிய பெருமாளையும் அல்லாத திருப்பதிகளோபாதி "கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லே" (திருக்குறு–19) என்று கோல்தேகை அநுப₄வித்–தாரித்தனேயிறே; அதுதானும், "என்றசொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட" (பெரிய திரு 5–8–1) என்கிறபடியே பெரியபெருமாளுடைய விப₄வ த₃ஶையிற் பாசுரங்களுபதே₃ஶமாய்க் கொண்டு தந்திருவுள்ளத்திலே ஊற்றிருக்க, "நின்னடியிணை யடைந்தேன்" (பெரிய திரு 5–8–1) என்று திருவடிகளை அநுப₄வித்தவளவிறேயுள்ளது.

ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் பெரிய பெருமாளை அநுப₄வியாநிற்கச்செய்தே தம்மை யுணர்ந்தநுப₄விப்பது, பரோபதே₃ஶம் பண்ணுவது, ஶேஷபூ₄ர்வகமாகப் பெரியபெருமாளுடைய பரத்வஸ்த₂ாபநம் பண்ணுவதாய், அந்யபரராய்ப் போந்தார்; இவர் அங்ஙனன்றியே "பூர்ணம்" (கட₂வல்லீ) என்று சொல்லுகிறபடியே பரத்வாதி₃க ளால் பூர்ணரான பெரியபெருமாளையே அநுப₄விக் கிருர். நம்மாழ்வார் தொடக்கமான ஆழ்வார் களுக்கு ப₄க₃வத₃நுப₄வம் நடவாநிற்கச்செய்தே முன்புள்ள ஐந்மபரம்பரைகளிலுண்டான து₃:க₂ாநுப₄வ ஸ்மரணத்தாலும்,ஸ்வரூபாநுரூபமான ப₄க₃வத்

போ4கத்தினுடைய அலாப4த்தாலும் க்லேஶாநுப4வம் கலசி நடவாநின்றது.

ஜாத்யந்த4னுக்குக் கண்ணைக்கொடுத்துக் கடலை இலக்காக்குமாப்போலேயும், அர்ஜுநனுக்கு தி3வ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்து வைஶ்வரூப்யத்தைக் காட்டி அநுப4விப்பித்தாப்போலேயும் அக்ரூர மாலாகாராதி3களுக்கு ஸௌந்த3ர்யஸௌஶீல்யாதி3 கு3ணவிஷ்காரத்தாலே அநுப4விப்பித்தாப்போலேயும், "ஏகைகஸ்மிந் பரமவயவேऽநந்த ஸௌந்த3ர்ய மக்3நம் ஸர்வம் த்3ரக்ஷ்யே க2தமிதி முத்4ா மாமத்4ா மந்த3சக்ஷு: த்வாம்ஸௌப்4ராத்ர வ்யதிகரகரம் ரங்க3ராஜாங்க3 ஸுநாம் தல்லாவண்யம் பரிணமயிதா விஶ்வபாரீண ம்ருத்3தி:" (ர.ஸ்த 1–89) என்கிறபடியே இவருடைய ஸௌத்யதையாலே அர்ச்சாரூபமாயிருக்கச் செய்தேயும் பெரியபெருமாள் தம்முடைய ஸௌந்த3ர்யத்தை ஆவிஷ்கரிக்க, அந்த ஸௌந்த3ர்யஸாக3ரத்தை லாவண்யமாகிற மரக்கலத்தாலே எங்குமொக்க அநுப4விக்கிறார்.

இன்னம் மற்றையாழ்வார்களிற்காட்டில் இவர்க்கு வாசி– "பல்லாண்டு" (திருப்பல்–1) "போற்றி" (திருப்பாவை–24) என்று ப4ாவிக்க வேண்டிற்று அவர்களுக்கு. அது வேண்டாதே இவர்க்கு அது ஜந்மஸித்3த4மாய்த்து. "குலங்களாய ஈரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" (திருச்சந்த–90) என்கிறபடியே இவர் தம்மை நாலுவர்ணத்துக்கும் புறம்பாக நினைத்திருப்பர்; பெரியபெருமாளும் அப்படியே நினைத்திருந்தார்; நித்யஸூரிகள் நாலு

வர்ணத்திலுமுள்ளாரல்லரே. ஆழ்வார்கள் இருகரையர் என்னும்படியிறே ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் ஐகாந்த்யம்; அவரிலும் இவர் 'பரோபதே3ஶமும் இதரநிராகரணமும் அநுப4வவிரோதி4' என்று வெறும் பெரியபெருமாளேயே அடிக்கும் தலைக்கும் செவ்விதாக அநுப4விக்கிறார்.

ஸ்நேஹோ மே பரம: (ரா.உத் 40–15) "என்றனளவன்றால் யானுடையவன்பு" (இர.திருவ. 100) ராஜம்ஸ்த்வயி இதுதானும் என்னுல் வந்ததன்று; "அதுவுமவன தின்னருளே" (திருவாய்8–8–3) நித்யம் ப்ரதிஷ்டி2த: இன்றன்றாகில் மற்றொருபோது கொடுபோகிறோமென்ன; அங்ஙன் செய்யுமதன்று; த4ர்மியைப்பற்றி வருகிறதாகையாலே. "நின்னலாலிலேன் காண்" (திருவாய் 2–3–7) என்னுமாப்போலே. ப4க்திஶ்ச நியதா ஸ்நேஹமாவதேது, ப4க்தியாவதேது என்னில்; பெருமாளை யொழியச் செல்லாமை பிறந்து வ்யதிரேகத்தில் முடிந்த சக்ரவர்த்திநிலை– ஸ்நேஹம்; ப4க்தியாவது – "நில்" என்ன, "குருஷ்வ" (ரா.அ. 31–24) என்னும்படி முறையறிந்துபற்றின இளையபெருமாள் நிலை.வீர தன்னைத் தோற்பித்த துறை. ப4ாவோ நாந்யத்ர க3ச்சதி "மற்றாரானுமுண்டென்பார்" (சிறிய திருமடல்) என்னுமாப்போலே கொடுபோக நினைத்த தே3ஶத்தின் பேரும்கூடத் தனக்கு அஸஹ்யமானபடி. இப்படி ராமாவதாரமல்லதறியாத திருவடியைப் போலேயாய்த்து இவரும், இவர் தேவாரமான பெரியபெருமாளையல்லது பரவ்யூஹ விப4வங்களை யறியாதபடியும்.

அநுப$_4$ாவ்யரான பெரியபெருமாள் தம்மைப் பார்த்தாலும், பரத்வம் போலே தே$_3$ஶவிப்ரக்ருஷ்டமாயிருத்தல், வ்யூஹம் போலே தத்ப்ராயமாயிருத்தல், விப$_4$வம்போலே காலவிப்ரக்ருஷ்டமாயிருத்தல், அந்தர்யாமித்வம்போலே அசக்ஷுர்விஷயமாயிருத்தல், அர்ச்சாந்தரங்கள் போலே தெய்வமல்லால் செல்லவொண்ணு(பெரிய திரு 1–7–4)திருத்தல், அங்கு வர்த்திக்கும்பேர் சிலைக்கை வேடரேயாய் (பெரிய திரு 1–7–2)ப$_4$யங்கரராயிருத்தல், பெரிய பற்றமேற வேண்டியிருத்தல், வருந்திப் பெருங்கூட்டத்தோடே போயேறினுல் கானமும் வானரமும் வேடுமேயாய் (நான் திருவ 47) மேலைவானவ (திருவாய்6–2–4)ரின்றிக்கேயிருத்தல் செய்கை யன்றிக்கே இத்தே$_3$ஶத் திலே இக்காலத்திலே எல்லார் கண்ணுக்கும் விஷயமாய்க் கொண்டு "பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்தநாடுஞ் சித்தர்களுந்தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய் நிற்கின்ற திருவரங்கம்" (பெரியாழ் திரு 4 9–6) என்கிறபடியே–எல்லார்க்கும் நின்றநின்ற நிலைகளிலே ஆஶ்ரயிக்கலாம்படி ஸர்வஸுலப$_4$மருமாய் "வன்பெருவானகம்" (பெருமாள் திரு 1–10) இத்யாதி$_3$ப்படியே உப$_4$யவிபூ$_4$தியையும் நிர்வஹித்துக் கொண்டு போருகிற மேன்மையையுடையராய், இப்படி ஸர்வாதி$_4$கருமாய் ஸர்வஶேஷியுமாய் ஸர்வரக்ஷகருமாய் ஸர்வஸமாஶ்ரயணீயருமாய் நிரதிஶயபோ$_4$க்$_3$யபூ$_4$தருமாயிருப்பவர். "ஶேஷ்யே புரஸ்தாச்ச$_2$லாயாம் யாவந் மே ந ப்ரஸீத$_3$தி" (ரா.அ. 111–14) என்று ஸ்ரீப$_4$ரதாழ்வான் என்தலையில்

சுமைவாங்கினாலல்லது எழுந்திரேனென்று கிடந்தாப் போலே உங்கள் சுமைகளை என்தலையில் வைத்தா–லல்லது எழுந்திரேன், ''யோக$_3$க்ஷேமம் வஹாம் யஹம்'' (கீ$_3$தா 9–22) என்று கிடக்கிறவரிறே. ஸ்ரீவைகுண்ட$_2$ம், திருப்பாற்கடல், திருவவதாரங்கள், உகந்தருளின திருப்பதிகளெல்லாம் பெரிய பெருமாளேயானாப்போலே அவ்வோவிடங்–களிலுண்டான ஸௌந்த$_3$ர்ய கு$_3$ணசேஷ்டி$_2$தாதி$_3$களெல்லாம் பெரியபெருமாள் பக்கலிலே காணலாம்.

பெரியபெருமாளுடைய அழகும் ஐஶ்வர்ய–மும் பரமபத$_3$த்தில் முகுளிதமாயிருக்கும்; அவதாரத்–திலே ஈரிலைபெறும், இங்கே வந்தபின்பு தழைத்தது. எங்ஙனே யென்னில்; பொங்கோதஞ் சூழ்ந்த புவனி–யும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாராகையாலே (நாச். திரு 11–3) அவ்வவ்விடங்களில் ஸங்குசிதமாயிருந்ததிறே; தன்னையுகந்தாரநுப$_4$விக்கையன்றிக்கே 'தான்' என்றால் விமுக$_2$ராயிருப்பாருங்கூட அநுப$_4$விக்கும்படி–யிருக்கையாலே நீர்மையாலே வரும் ஏற்றம் இங்கே யுண்டு. கு$_3$ணாதி$_4$க்யத்தாலேயிறே வஸ்துவுக்கு உத்கர்ஷம்; கு$_3$ணம் விலைபெறுவது இங்கேயிறே. கு$_3$ணத்தில் அகப்பட்டார் இவ்விஷயம் போக்கி–யறியார்களிறே. ''யதோ வாசோ நிவர்த்தந்தே'' (தை.ஆந. 9–1) என்று– வேத$_3$ங்களுக்கும் எட்டாத ஸர்வேஶ்வரனை ஆற்றில் தண்ணீரோபாதி ஆற்றுக்குள்ளே கண்டநுப$_4$விக்கலாம்படி இருக்கிறவிட மிறே

மழைக்கன்று வரைமுனேந்தும் மைந்தனே மதுரவாறுன (திருமாலை 36) அவ்வாறு இவ்வாறுய்த் துக்காணும். ஆஶ்ரயணீயராகையாலே மேன்மையும், நீர்மையாலே உபாயப$_{4}$ாவத்தையும், வீர்யாதி$_{3}$களாலே விரோதி$_{4}$நிரஸநத்தையும் ஸௌந்த$_{3}$ர்யத்தையும் சொல்லுகையாலே போ$_{4}$க்$_{3}$யதையும் சொல்லிற்று- கிறது. ப்ராபகஸ்வரூபம் அநுப$_{4}$வத்திலே மறைந்து போய்த்து.

இப்ரப$_{3}$ந்த$_{4}$ந்தான் ப்ரணவம் போலே அதிஸங்குசிதமாயிருத்தல், வேத$_{3}$மும் வேதோ$_{3}$ப ப்$_{3}$ரும்ஹணமான மஹாப$_{4}$ாரதமும் போலே பரந்து குறுப்புக்கூடாயிருத்தல் செய்யாதே பத்துப்பாட்- டாய் ஸங்க்$_{3}$ரஹமுமாய் ஸர்வாதி$_{4}$காரமுமாய், "ப்ராப்யஸ்ய" (ஹாரீத ஸம்ஹிதா) இத்யாதி$_{3}$ப் படியே அர்த்த$_{2}$பஞ்சக ப்ரதிபாத$_{3}$கமுமாயிருக்கும்.

"வேதோ$_{3}$பப்$_{3}$ரும்ஹணார்த்த$_{2}$ாய தாவக்$_{3}$ராஹ யத ப்ரபு$_{4}$:" (ரா.பா$_{3}$.4–6) என்றும் "வேதா$_{3}$நத்$_{4}$யாப யாமாஸ மஹாப$_{4}$ாரதபஞ்சமாந்" (ப$_{4}$ார ஆதி$_{3}$ 64–131) என்றும் சொல்லுகிறபடியே–வேதோ$_{3}$பப்$_{3}$ரும்ஹண மான மஹாப$_{4}$ாரத ஸ்ரீராமாயணங்களும் "நாராயண கதா$_{2}$மிமாம்" (ப$_{4}$ார ஆதி$_{3}$ 1–27) இத்யாதி$_{3}$களைச் சொல்லி வைத்து ப$_{4}$க$_{3}$வத் கதை$_{2}$யல்லாதவற்றையும் சொல்லிற்று; திருவாய்மொழியும் "அமர்சுவை ஆயிரம்" (திருவாய் 1–3–11), "பாலோடமுதன்ன ஆயிரம்" (திருவாய் 8–6–11), "உரைகொளின் மொழி" (திருவாய் 6–5–3) என்று ஏதமிலாயிரமா (திருவாய் 1–6–11) யிருந்ததேயாகிலும், அந்யா–

பதே$_3$ஸஸ்வாபதே$_3$ஸமென்ன, ஸாமாநாதி$_4$கரண்ய நிர்ணயமென்ன, த்ரிமூர்த்தி ஸாம்யதது$_3$த்தீர்ண தத்த்வநிஷேத$_3$மென்ன, இவைதொடக்கமான அருமைகளையுடைத்தாயிருக்கும்; திருநெடுந்தாண்டகமும் பரப்பற்று முப்பதுபாட்டாயிருந்ததேயாகிலும் அதுக்கும் அவ்வருமைகளுண்டு; திருமாலைக்கு அவ்வருமைகளில்லையேயாகிலும் தம்முடைய லாப$_4$ாலாப$_4$மான ப்ரியாப்ரியங்களை ப்ரதிபாதி$_3$யா நிற்கும்.

திருப்பல்லாண்டுக்கு இக்குற்றங்களொன்றுமில்லையேயாகிலும் அதுக்குமொரு குற்றமுண்டு – த்ரிவித$_4$ாதி$_4$காரிகளுடைய கு$_3$ணதே$_3$ாஷங்களை ப்ரதிபாதி$_3$க்கையாலே. இது ப்ரணவம் போலுமல்ல, அதிஸங்குசிதமாய் து$_3$ர்ஜ்ஞேயமாயிராமையாலே. "யதி$_3$ஹாஸ்தி தத$_3$ந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்" (ப$_4$ார. ஆதி$_3$ 62–26) என்கிறபடியே ஆயிரத்திலொன்றும் கடலிற்குளப்படியும் போலே புறம்பில்லாதவையெல்லாம் இதிலே யுண்டாய், இதிலில்லாததொன்றும் புறம்பின்றியேயிருக்கும். பரவ்யூஹவிப$_4$வங்களை ப்ரதிபாதி$_3$க்கையன்றியே அர்ச்சாவதாரரூபேண வந்தவதரித்து, திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடி வருடப் பள்ளிகொள்ளுங் கருமணியைக் கோமளத்தைக் கண்ணாரக்கண்டு (பெருமாள் திரு 1–1), மணத்தூணேபற்றி நின்று (பெருமாள் திரு 1–2) வாயார வாழ்த்துகிற ப்ரப$_3$ந்த$_4$மாகையாலே எல்லா ப்ரப$_3$ந்த$_4$ங்களிலும் இப்ரப$_3$ந்த$_4$ம் விலக்ஷணம்.

இவர் தமக்கு ப்ராப்யரும், ப்ராபகரும், ருசிஜநகரும் விரோதி$_4$ நிவர்த்தகரும் எல்லாம் பெரியபெருமாளே என்கிறார். ப$_2$லபே$_4$ாக்த்ருத்வம் தம்மதாயிருக்க, "எல்லாமவரே" என்கிறபடியெங்ஙனேயென்னில்;— ப்ரத$_2$மஸுக்ருதமும் தானாய் இப்பேற்றுக்கு வேண்டுவன நிர்வஹித்துப் போந்த ஸௌஹார்த்$_3$—மும், அத்தலையிலே கிடக்கையாலே பேற்றுக்கு இத்தலையிலுள்ளது சொல்லப் பாத்தம் போராதிறே. உள்ளதுண்டாகில் அவனநுக்$_3$ரஹத்தாலேயாமித்தனை.

இதரவிஷயங்களில் அருசியும், ப$_4$க$_3$வத் விஷயத்தில் அப்ரதிஷேத$_4$மும் விளைந்த மாத்ரத்திலே பெரியபெருமாள் தம்முடைய ஸ்வரூபரூபகு$_3$ண விபூ$_4$திகளைக் காட்டக்கண்டநுப$_4$வித்து ப்ரீதராகிறார். "ஆநயைநம் ஹரிஸ்ரேஷ்ட$_2$" (ரா.யு. 18–34) என்று மஹாராஜரையிட்டு ஸ்ரீவிபீ$_4$ஷணாழ்வானை அருள்பாடிட்டாப்போலே, "தாழ்ச்சி மற்றெங்குந் தவிர்ந்து (திருவாய்.3–2–4) கடைத்தலையிருந்து வாழும்சோம்பரான (திருமாலை–38) லோகஸாரங்க$_3$ மஹாமுநிகளை யருள்பாடிட்டு, "நம்பாடுவானை அழைத்துக்கொண்டு வாரும்" என்ன; அவரும் "அருள்பாடருள்பாடு" என்று சொல்ல; இவரும் "அடிப்பாணனடிப்பாணன்" என்று இருய்க்க; இவரைவிடாதே தோள்மேலே யேற்றிக் கொண்டு போக, வழியிலே ஒன்பதுபாட்டுப்பாடித் திருப்பிரம்புக்குள்ளே நின்று பத்தாம்பாட்டுப் பாடித் தலைக்கட்டுகிறார்.

*******
***

1. அமலனுதிபிரா னடியார்க் கென்னை யாட்படுத்த
விமலன் விண்ணவர்கோன்விரையார்பொழில்
வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன்
நீள்மதிளரங்கத்தம்மான் திருக்
கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன
வொக்கின்றதே!

**அவ:** முதற்பாட்டில் பெரியபெருமாள் திருவடிகளினழகு தம்மை ஆட்கொண்டதென்கிறார். ஆகாஶத்தினின்றும் ஸஹ்யத்திலே வர்ஷித்து அங்குநின்றும் காவேரியாறாய்ப் போந்திழிந்து கால்களாய்ப் புகுந்துபோய் நாட்டார்க்கு உபயுக்த மாமாபோலே, பரமபத$_3$மாகிற பரமவ்யோமத்தி னின்றும் திருமலையிலே வந்திழிந்து தெற்குநோக்கி வந்து பள்ளநாலியான கோயிலிலே தேங்கிக் கீழ்மேலாகக் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமா ளாகிற மதுரவாற்றினிடைப் (திருமாலை–36) புகுந்தோடுகிற காலை யநுப$_4$விக்கிறார்.

**வ்யா:–**[(அமலன்] ஸ்ரீவால்மீகிப$_4$க$_3$வான் "கோகு$_3$ணவாந்" (ரா.பா$_3$. 1–2) என்று ப்ரஶ்நம் பண்ண, "இக்ஷ்வாகுவம்ஶப்ரப$_4$வ:" (ரா. பா$_3$ 1–8) என்று ஶீலகு$_3$ணத்தை முந்துறச் சொன்னாப்போலவும், நம்மாழ்வார் ஆநந்த$_3$வல்லியில் ஆநந்த$_3$கு$_3$ணத்தை, "உயர்வற உயர்நலமுடையவன்" (திருவாய் 1–1–1) என்று ப்ரத$_2$மத்திலே அநுப$_4$வித்தாப்போலவும், இவரும் தம்முடைய நிஹீநதையைப் பாராதே மேல்விழுந்தபடியைக்கண்டு அவனுடைய

ஹேயப்ரத்யநீகதையை முற்படவநுப4விக்கிறார். தம்முடைய ஜந்மாதி3களாலுண்டான நிகர்ஷாநுஸந்த4ாநத்தாலே அகல, அதுதானே பற்றாசாகத் திருவுள்ளம் புண்பட்டு மேல்விழுந்த விடத்திலும் அத்தலைக்கவத்3யமின்றியிலே நிர்மலனாய் இருக்கிற படியைக்கண்டு “அமலன்” என்கிறார். “என்கண் பாசம்வைத்த பரஞ்சுடர்சோதி” (திருவாய் 3–3–4).

[அமலன்] அபஹதபாப்மத்வாதி3 கு3ணங்கள் ஆத்மாவுக்குமுண்டாயிருக்கச்செய்தேயும், ஹேய ஸம்ப3ந்த4ாவஹமாய் ப4க3வத்ப்ரஸாத3த்தாலே உண்டாகவேண்டியிருக்கும்; இவன் அங்ஙனன்றியேயிருக்கும். [அமலன்] ஶுத்3த4னென்றபடி. இவன் ஶுத்3த4னுகையாவது–தானொருத்தன் ஶுத்3த4னுகையன்று; தன்னோடு ஸம்ப3ந்தி4த்தாரையும் ஶுத்3த4ராக்கவல்ல வடிவுடைமை, துயரறு சுடரடியிறே (திருவாய் 1–1–1). “பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகு4நந்த3ந!” (ரா.உத் 82–9) என்னுமாப்போலே. [அமலன்] அகி2லஹேயப்ரத்யநீகன். அசித்3க3தமான பரிணாமம், தத்ஸம்ஸ்ருஷ்ட சேதநக3தமான அஜ்ஞாந து3:க2ங்கள், முக்தக3தமான ஜ்ஞாநஸங்கோசவிகாஸங்கள், நித்யஸித்3த4க3தமான பாரதந்த்ர்யம் இவையாகிற ஹேயங்களுக்கு ப்ரத்யநீகனாயிருக்கும். பாரதந்த்ர்யத்துக்குக் குறையென்னென்னில்; தனக்கவ்வருகொருவனுளனால் வருமதே பாரதந்த்ர்யம்; அது ஈஶ்வரனுக்கு அவத்3யமிறே. ஸ்வதந்த்ரனுக்கு ஶேஷித்வம் அவத்3யமாமாப்போலே. புருஷனுக்கு ஸ்தநோத்3பே4த3மும், ஸ்த்ரீகளுக்கு

ஸ்மஸ்ருஸம்யோக$_3$மும் போலேகாணும் அந்த மாருட்டத்தாலே வருமவத்$_3$யம். ப்ரத்யநீகனுகை யாவது – உக்தாவத்$_3$யங்கள் தன்னை ஸ்பர்ஶியாமலி ருக்குமளவன்றிக்கே புறம்புள்ள அவத்$_3$யங்களையும் அறுத்துக்கொடுக்கவல்லனுகை. தேஜஸ்திமிரங்கள் போலே ஹேயப்ரதிப$_4$டன் என்கை. ஆகையிறே இவனையொழிந்தார்க்கடைய இவனே ஶுப$_4$ாஶ்ரயமாயிருக்கிறது.

[ஆதி] இப்படி நிஹீநரான உம்மை மேல்விழுந்து அங்கீ$_3$கரிக்கைக்கடியென்னென்ன; பெற்றபாவிக்கு விடப்போமோவென்கிறுர். [ஆதி] "ஆதீ$_3$யத இதி ஆதி$_3$:" ஸ்வரூபரூபாதி$_3$களைக் கண்டு எல்லாரும் மேல்விழும்படியிருக்கிற தான் இத்தலையில் நிஹீநதை பாராதே மேல்விழுந்தானென்கை. "ஆதீ$_3$யத இதி ஆதி$_3$:" தன்னையநுப$_4$வித்தால் வேறென்றிற்போக வொட்டாதபடியாயிருக்கும். [ஆதி] "பூர்வஜ" (ஜிதந்தே 1–1) என்னுமாப்போலே என்னுடைய நிகர்ஷத்தைப் போக்கித் தன்பக்கலிலே சேர்த்துக்கொள்ளுகையாலே என்பேற்றுக்கு முற்பாடனவன். [ஆதி] அடியில் அழிந்த ஜக$_3$த்தை உண்டாக்கினப்போலே நானழித்துக்கொண்ட ஸ்வரூபத்தை உண்டாக்கினவன். இத்தால்– கல்யாணகு$_3$ணயோக$_3$த்தைச் சொல்லிற்று. ஆக இரண்டுபத$_3$த்தாலும் ஹேயப்ரத்யநீகத்வமும், கல்யாணகு$_3$ணயோக$_3$மும் சொல்லிற்று. [பிரான்] கீழ்ப் பண்ணின உபகாரத்தை நினைத்து "பிரான்" என்கிறதாதல். மேல் பண்ணப்புகுகிற உபகாரத்தை

நினைத்து "பிரான்" என்கிறதாதல். [பிரான்] என்நிகர்ஷம் பாராதே என்னை விஷயீகரித்த உபகாரகன்.

[அடியார்க்கென்னை ஆட்படுத்தவிமலன்] 'எனக்கு' என்றும், 'பிறர்க்கு' என்றும் திரிந்த வென்னை, தனக்கும் தன்னடியார்க்குமாக்கின பரிஶுத்$_3$த$_4$ ஸ்வப$_4$ாவன். தலையைப்பிடித்துக் காற்கீழேயிட்டுக் கொண்டான். "ரத்நஹாரீ ச பார்த்தி$_2$வః" (ரா. ப$_3$ா 53–9) என்னுமாப்போலே. நல்லதுகண்டால் 'அவர்களுக்கு' என்றிறே அவனிருப்பது. ஸ்வவிஷய ஶேஷத்வத்தையுண்டாக்கினவளவன்றிக்கே ததீ$_3$ய ஶேஷத்வ பர்யந்தமாக்கி, தச்சே$_2$ஷத்வம் நிலைநிற்கும்படி பண்ணினான். ஆத்மாவுக்கு நிலைநின்ற வேஷம் ஶேஷத்வமாகையாலே "அடியார்க்கு" என்கிறார்.

[அடியார்க்கு] இவர்களுக்கு ஊரும்பேரும் தாருமா(திருவாய் 6–7–2)கிறது ஶேஷத்வமாய்த்து. ஶேஷத்வமிறே இவ்வாத்மாவுக்கு ப்ரத$_2$மநிரூபகம். [என்னை] தே$_3$ஹாத்மாபி$_4$மாநிகளும் தீண்டாத வென்னை. ப்ரக்ருதிக்கடிமை செய்துபோந்த வென்னை. தந்தபத$_3$த்தின் சீர்மையறியாதவென்னை. நன்மைக்குத் தனக்கவ்வருகில்லாதாப்போலே தீமைக்கு எனக்கவ்வருகில்லாதவென்னை. [ஆட்படுத்த] ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வத்தளவிலே நின்றால் மீளஶங்கை யுண்டு; ப$_4$ாக$_3$வதஶேஷத்வத்தளவும் சென்றால் மீளப்போகாதே; உகப்பாலே வருமதாகையாலே. ஒரு க்ஷேத்ரம் பத்தெட்டு க்ரயம் சென்றால் மீளவிரகில்லை. ஸ்ரீவிபீ$_4$ஷணாழ்வானுக்கு முதலிகளுடைய

விஷயீகாரம் பெருமாளுடைய விஷயீகாரத்துக்கு முற்பட்டாப்போலே, இவர்க்குத் தத்₃யவிஷயீகாரம் முற்பட்டபடி. "தத்₃ருஶ:" (ரா.யு 17-2) "ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட₂!" (ரா.யு.18-34). [ஆட்படுத்த] தான் ஶேஷித்வத்தினுடைய எல்லையிலே நின்று என்னை ஶேஷத்வத்தினுடைய எல்லையிலே வைத்தான்.

[அடியார்க்கென்னை ஆட்படுத்த விமலன்] அவர்களோடு ஸமபு₄த்தி₄ பண்ணியிராமே அவர்களுக்கு ஶேஷபூ₄தனுக்கின பரிஶுத்₃த₄ ஸ்வபா₄வன். ஐஸ்வர்யார்த்தி₂களும், ஆத்மப்ராப்தி காமரும் தன்னைப் பற்றுமவர்களிறே; இவ்வளவு புகுரநிறுத்துகைக்கு அதி₄காரிகளல்லர்களோ யவர்கள்; அநந்யப்ரயோஜநரிறே இவர்க்கு ஆவார்; தாமும் அநந்யப்ரயோஜநராகையாலே விஶேஷித்து லோகஸாரங்க₃மஹாமுநிகளையிட்டுத் தம்மை விஷயீகரித்தபடியைச் சொல்லுகிறர். தம்மை வஹித்தவளவில் தாம் ஶேஷபூ₄தரானபடி என்னென்னில்; திருத்துழாய் திருவபி₄ஷேகத்திலே இருந்ததென்ன, ஶேஷத்வம் குலையாதே; "மயி ப்₄ருத்யே ஸ்தி₂தே தே₃வாநாஜ்ஞாபயது கிம் ந்ருபை:" (வி.பு. 5-21-12) என்றுனென்ன அவனுடைய ஶேஷித்வங்குலையாதாப்போலே. [விமலன்] என் சிறுமை பாராதே தத்₃யர்க்கு ஶேஷமாக்குகையால் வந்த ஔஜ்ஜ்வல்யம். எதிரிகள் தரம்பாராதே சீரியர் தந்தாமளவிலேயிறே கொடுப்பது.

[விண்ணவர்கோன்] நிஹீநரான உம்மை இப்படி விஷயீகரித்தது ஆளில்லாமையாலேயோ என்னில்,

ஒரு த்ரிபாத்விபூதியாகத் தன்னைத் தாலாட்ட இருக்கிறவன் கிடீர் என்னை விஷயீகரித்தான் என்கை. இவ்வௌதார்யங்கற்றது அவர்களோடே கிடீரென்றுமாம். "அஸ்மாபிஸ் துல்யோ பவது" (ரா.யு. 18-38) என்றுரர்களிறே. இங்குத்தைக் குழாத்தையொழிய அங்குத்தைக் குழாத்தையும் காட்டித் தந்தான். "உடன்கூடுவதென்றுகொலோ" (திருவாய் 2-3-10) என்று இவருக்கு ஆசைப்பட வேண்டுவதில்லை. (கோன்) அவர்களாலும் எல்லைகாணவொண்ணது.

[விரையார்பொழில் வேங்கடவன்] லீலா விபூதியிலொருவரில்லாமையாலே உம்மை அங்கீகரிக்கலாமேயென்ன "நாவேவ யாந்தமுபயே ஹவந்தே" (தை. ஸம். கா-1.ப்ர-6, அநு.12, பஞ்-3) என்றும், "சக்ஷுர்தேவாநாமுத மர்த்யாநாம்" (யஜுர் கா 4, ப்ர-6, அநு.5-2) என்றும், "கண்ணுவா னென்றும் மண்ணேர் விண்ணேர்க்கு" (திருவாய் 1-8-3) என்றுஞ்சொல்லுகிறபடியே இந்த லீலா விபூதியிலுள்ள முமுக்ஷுக்களோடு, பரமபதத்திலுள்ள நித்யமுக்தரோடு வாசியறத் திருமலையிலே வந்து சூட்டுநன்மாலைகளிற் (திருவிருத்தம்-21) படியே "வழுவிலாவடிமை செய்யவேண்டு(ம்) நாம்" (திருவாய். 3-3-1) என்று ப்ரார்த்திப்பார், "நல்கியா ளென்னைக் கொண்டருளே" (பெரிய திரு 1-9-1) என்று ப்ரார்த்திப்பாராய் அடிமைசெய்ய அடிமைகொள்ளுகிற பூர்ணன் என்கை. இப்படி உபயவிபூதியிலுள்ளாரும் அடிமைசெய்ய அடிமை

கொள்ளுகிற பூர்ணன் கிடீர் தன் மேன்மைபாராதே என்னை விஷயீகரித்தானென்கை.

[விரையார்பொழில்வேங்கடவன்] பரிமளம் நிறைந்த திருச்சோலையையுடைய திருமலையை உடையவன். “ஸர்வக$_3$ந்த$_4$:” (சா$_2$ந் 33–14–2) என்கிற வஸ்துவாகையாலே போலியான பரிமளம் கண்டு கால்தாழ்ந்ததித்தனை. “குஶஸ்த$_2$லே நிவஸதி” (பா$_4$. உத்$_3$ 73–1) என்னுமாப்போலே பரமபத$_3$த்தில் நின்றும் கோயிலேற வருகைக்கென்று தங்குகிற தே$_3$ஶம் திருமலை. பிள்ளைதிருநறையூரரையரைச் சிலர், “பெரியபெருமாளை அநுப$_4$விக்கவிழிந்தவர் திருவேங்கடமுடையான்பாடே போவானென்” என்ன; ஆற்றிலே அமிழ்ந்துகிறவன் ஒருகாலைத் தரையிலேயூன்றினால் பிழைக்கலாமோவென்று கால்தாழ்க்குமாப்போலே, இவரும் பெரியபெருமாள–ழகிலே அழுந்துகிறவராகையாலே திருமலையிலே கால்தாழ்ந்தார்; அது மடுவாகிறதறிகிலர்; வேறேசிலர், “பெரியபெருமாளைப் பாடாநிற்கத் திருமலையிலே போவானென்” என்று அவரைக்கேட்க; “ஒருவனைக் கவிபாடும்போது அவனுடைய வரத்துச்சொல்லியிறே கவிபாடுவது; பரமபத$_3$த்திலே நின்றும் ஸ்ரீமது$_4$ரையிலே தங்கி திருவாய்ப்பாடிக்கு வந்தாப்போலே ஸ்ரீவைகுண்ட$_2$த்தினின்றும் திருமலையிலே தங்கிக்காண் வந்தது” என்றருளிச் செய்தார். நித்யஸூரிகளையுடையனானதுக்குமேலே ஓரைஶ்வர்யம்.

[விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்] ஆற்றிலே அழுந்துவார் ஆழங்காலிலே

யிளைப்பாறத்தேடுமாப்போலே அவர்களும் வந்தடிமை செய்யுமிடம். (வேங்கடவன்) அர்ச்சாவதாரத்துக்குப் பொற்கால் பொலியவிட்ட விடம்.

[நிமலன்] நிர்ஹேதுகமாக விஷயீகரித்த ஶுத்$_3$தி$_4$யோக$_3$த்தையுடையவன். இத்தலையைப் பெறுகைக்குப் பச்சையிட்டானும் தானே. இத்தலையில் அர்த்தி$_2$த்வமின்றிக்கேயிருக்க இப்படி உபகரிக்கை பால் வந்த ஔஜ்ஜ்வல்யம். இவனும் ஓரடியிடப் பார்த்திராதொழிகை. ஓரடியிட்டாருண்டாகில் ''பத்$_3$ப்$_4$யாமபி$_4$க$_3$மாச்சைவ ஸ்நேஹ ஸந்த$_3$ர்ஶநேந ச'' (ரா.அ.50–41). ஆபி$_4$முக்$_2$யமடியாக அங்கீ$_3$கரித்து ஓரஞ்சலிமாத்ரமுங் கூடவுண்டறுக்கமாட்டாதானொரு வன். (நின்மலன்) இத்தலைக்கு உபகரித்தானுயிருக்கை அன்றிக்கே தன்பேறுயிருக்கை. ''அமலன்'' என்றது – இவரைத் தனக்காக்கினபடி; ''விமலன்'' என்றது – தன்னடியார்க்காக்கினபடி; ''நிமலன்'' என்றது – நான் பச்சையிடாதிருக்க என்காரியஞ் செய்தானென்கை. [நின்மலன்] இது தன் பேறுகச் செய்தானென்கிறுர். ''க்ருதக்ருத்யஸ் தத$_3$ா ராம:'' (ரா.பா.1–85) என்கிறபடியே. [நின்மலன்] தான் உபகரித்தானுய், இத்தலை, ''உதவிக்கைம்மாறென்னுயிர்'' (திருவாய் 7–9 10) என்றுப்போலே ப்ரத்யுபகாரந்தேடித் தடுமாறுதபடி, ''ப்ரணஷ்டஸ்ய யத$_2$ா லாப$_4$:'' (ரா.ப$_4$ா 18–50) என்கிறபடியே–உடையவன் உடைமை பெற்ருகில் நமக்கென்னென்று, ஆத்மலாப$_4$ம் ஆகாதாம்படியிருக்கிற ஶுத்$_3$தி$_4$யை யுடையவன்.

[நீதிவானவன்] இப்படிப் புகுரநிறுத்துகைக்கடி யேஷயேஷித்வங்கள் முறைகெடாமல் நடக்கும் நித்யவிபூதி வாஸனையென்கை. "ஈஶ்வரோஹம்" (கீ₃தா.16–14) என்று – எதிரிட்டிருக்குமிடமிறே இவ்விடம். அங்கு கலக்குவாருமில்லை; கலங்குவாருமில்லை; இங்கு கலக்குவாருமுண்டு; கலங்குவாருமுண்டு. [நீண்மதிளரங்கத்தம்மான்] "நீதிவானவன்" என்ன "நீண்மதிளரங்கத்தம்மான்" என்கிறார். "அளப்பரிய ஆரமுதை அரங்கமேய அந்தணனை" (திருநெடு 14) என்னுமாப்போலே. [நீண்மதிளரங்கம்] ரக்ஷகமாகப் போரும்படியான மதிளையுடைய பெரியகோயிலிலே கண்வளர்ந்தருளுகிற யேஷி. இப்பாசுரம் கேட்டுப்போலே காணும் திருமங்கையாழ்வார் திருமதிள் செய்தது; அழகியவாயாலே இதருளிச்செய்த பின்பாகாதே திருமாளிகைகளும் திருக்கோபுரங்களும் கனத்தது. [அம்மான்] அங்குள்ளாரோடொத்த ப்ராப்தி இங்குள்ளாரோடுண்டாகையாலிறே இங்கு வந்து சாய்ந்தருளிற்று. [அம்மான்] ஈரரசு தவிர்ந்தாலிறே யேஷித்வம் பூர்ணமாவது. திருமலையில் போவது நிலமல்லாமே மீளவும் கோயிலிலே புகுருகிறார் வெள்ளத்தைக் கள்ளமடையாலே பள்ளத்தே விடுவாரைப்போலே, திருவேங்கடமுடையான் வடக்குத்திருவாசலாலே வந்து புகுந்தானத்தனை என்றுமாம்.

[திருக்கமலபாதம்] பெருக்காற்றிலேயிழிவார் தெப்பங்கொண்டு இழியுமாப்போலே ஒரு தாமரை

பூவை த்3ருஷ்டாந்தமாக்குகிறார். செவ்வி, குளிர்த்தி, நாற்றம், விகாஸம் இவை தாமரைப்பூப்போலே யிருக்கையாலே. ஆதி3த்யஸந்நிதி4யிலே அலரும் தாமரைபோலே ஆஶ்ரிதஸந்நிதி4யிலே அலருந் தாமரையாய்த்துத் திருவடிகள். பிராட்டி திருமுலைத் தடத்திலும், திருக்கண்களிலும் ஒற்றிக்கொள்ளும் திருவடிகள். இவருடைய தளிர்புரையுந்திருவடி (திருநெடு–1)யிருக்கிறபடி. "அம்மான் திருக்கமல பாதம்" என்கையாலே ப்ராப்தமுமாய் ப்ராப்யமுமான திருவடிகளென்கை. "நாராயண சரணங்கள்" என்றபடி.

"வந்து" என்று – அதினுடைய உபாயபூர்த்தி சொல்லுகிறது. [வந்து] "விதி4ஶிவஸநகாத்3யைர் த்4யாதுமத்யந்ததூ4ர" (ஸ்தோ. ரத் 47)மான திருவடிகள்கிடீர் என்னளவும் வந்து விஷயீகரித்தது! த்4வீபாந்தரத்தில் சரக்குசேரவேண்டினால் பாதிப்பாதி வழியாகிலும் வருதல், ஒருதலைப்பற்றுதல் செய்ய வேணுமிறே; அங்ஙனன்றியே, "வந்துனதடியேன் மனம்புகுந்தாய்" (பெரிய திரு 3–5–1) என்கிறபடியே வழிவந்தானும் தானே, பற்றினானுந்தானே என்கிறது. [என் கண்ணினுள்ளன] எத்தைக் கண்ட கண்களுக்கு இவை விஷயமாகின்றன. [நீதிவானவன்–கமலபாதம்என் கண்ணினுள்ளன] ஸதா3தா3ர்ஶநம் பண்ணுகிறவர்களுடைய கண்ணுக்கிலக்கானது கிடீர் என் கண்ணுக்கிலக்காய்த்து. வல்லதனை நாளும் விரோத4ம் பண்ணினேன்; போக்கற்றவாறே

கண்ணைச்செம்பளித்துக் கண்ணையிறுத்து உள்ளே புகுந்து நிற்கையாலே என் கண்ணினுள்ளன. அன்றியே தம் கண்ணாலே பார்க்கை அவத்$_3$யமென்று கண்களைச் செம்பளித்தார்; கண்ணினுள்ளே ப்ரகாஶிக்கத்தொடங்கிற்று. [ஒக்கின்ற] ப்ரயோஜநம் இரண்டுக்கும் ஒத்திராநின்றது. அங்குத்தைக்கு ஸிலஸித்$_3$தி$_4$; இங்குத்தைக்கு ஸ்வரூபஸித்$_3$தி$_4$.

[ஒக்கின்ற] என் கண்ணுக்கிலக்கான உங்களுக்குமொக்குமென்கிருராதல். "கண்ணினுள் ளன வொக்கின்றவே" என்று ஒருபத$_3$மாய் என் கண்ணினுள்ளனவானுப்போலேயிராநின்றதே யென்றபடி. ஒன்பது பாட்டு வழியிலே அநுஸந்தி$_4$த்து, பத்தாம்பாட்டிலே திருவடித் தொழுதார் என்கிற ஐதிஹ்யத்தின்படியே மாநஸ ஸாக்ஷாத்காரந்தான் கண்ணிட்டுக் கண்டாப்போலே யிருக்கை. அங்ஙனன்றிக்கே மாநஸஸாக்ஷாத்காரத்–தோடு சேர்ந்திருந்ததீ சக்ஷுர்விஷயமான திருவடிகளென்றுமாம்.

[அமலன்] உயர்வற உயர்நலமுடையவன், (திருவாய் *1–1–1*); [ஆதி] யவன்; [பிரான்] மயர்வறமதி நலம் அருளினன்; [அடியார்] பயிலுஞ்சுடரொளி (திருவாய் *3–7*); [விண்ணவர் கோன்] அயர்வறுமமரர் களதிபதி; [வந்து] அவர் "தொழுதெழு" என்ருர்; இவர்க்கு அவைதானே வந்தன.

**2. உவந்த வுள்ளத்தனய் உலகமளந்து அண்டமுற**
**நிவர்ந்தநீண்முடியன் அன்று நேர்ந்தநிசாசரரைக்**
**கவர்ந்த வெங்கணைக்காகுத்தன் கடியார்பொழில**
**ரங்கத்தம்மான் அரைச்**
**சிவந்தவாடையின்மேல்சென்றதாமெனசிந்தனையே.**

அவ:— இரண்டாம்பாட்டு. [உவந்த] கீழிற்பாட்டிலே "அரங்கத்தம்மான் திருக்கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றவே" என்று – திருவடிகள் தானே தம்மை விஷயீகரித்துத் தந்திருவுள்ளத்திலே ப்ரகாஶித்தபடியைச் சொன்னர்; இப்பாட்டில் "வந்துனதடியேன் மனம்புகுந்தாய் புகுந்ததற்பின் வணங்கும் என்சிந்தனைக் கினியாய்" (பெரிய.திரு.3–5–1) என்கிறபடியே அவன் விஷயீகரித்துப் புகுந்தபின்பு, திருவடிகளளவன்றியே த்தோடு சேர்ந்த திருப்பீதாம்ப$_3$ரத்தளவுஞ் செல்லத் தம் சிந்தை நசைபண்ணுகிறபடியைச் சொல்லுகிருர்.

ஈன்று அணித்தானநாகு, தன் கன்றுக்கு வாஸனையில்லாமையாலே முதலில் தானே தன்முலையை அதின்வாயிலே கொடுக்கும்; பின்பு சுவடறிந்தால் கன்றுதானே இதுகாற்கடைக் கொள்ளிலும் மேல்விழுமிறே. அப்படியே திருவடிகள் தானே வந்து பே$_4$ாக்$_3$யமானபடி சொன்னர்– முதற்பாட்டில்; இதில் – தம்முடைய நெஞ்சு சுவடறிந்து மேல்விழுந்தபடி சொல்லுகிருர். திருவடிகளிலே கிடந்த திருவுள்ளம் திருப்பரியட்டத் தின் மேலே சேர்ந்தபடி யெங்ஙனே யென்னில்; தானறிந்து சேரில் விஷயத்தின் பே$_4$ாக்$_3$யதைக்குக் குற்றமாம்; ஆகையால்

போ4க்3யதை அளவுபட்டதுமல்ல; ஆசை தலைமடிந்ததுமல்ல; கடலோதங் கிளர்ந்தலைக்கப்புக்கால் உள்ளே கிடந்ததொரு துரும்பு கடலையளவிட்டல்லவே கரையிலேயேறுவது; ஒரு திரையிலே ஒருதிரையேற வீசுமத்தனையிறே.

கீழ்ப்பாட்டில் – "நிமலன் நின்மலன்" என்று அபேக்ஷாநிரபேக்ஷமாகவும் ஸ்வயம்ப்ரயோஜநமாகவும் தன் திருவடிகளை உபகரித்தானென்றிறே இவர் சொல்லிற்று. "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" (லக்ஷ்மீதந்த்ரம் 17–78) என்கிறபடியே ரக்ஷ்யத்தினுடைய அபேக்ஷையைப் பார்த்திருப்பானொருவனன்றே; ஆகையால் இது உபபந்நமென்று தோற்றியிருந்ததில்லையீ! என்ன; இந்த லோகமாக மஹாப3லியபி4மாநத்திலே புக்கு அந்யசேஷமாய்க் கிடக்க, இவர்களுடைய அர்த்தி2த்வ நிரபேக்ஷமாக இவர்கள் தலையிலே தன் திருவடிகளைவைத்து இதுதானே ப்ரயோஜநமாக உகந்து போருமாகாரம் அவனுக்கு அடியே பிடித்து உள்ளதொன்றன்றோ? இன்று புதிதாக வருகிறதொன்றோ வென்கிறார்.

வ்யா:– [உவந்தவுள்ளத்தனாய்] ஆழ்வாரை அகப்படுத்துகையால் வந்த ப்ரீதி. ஸர்வேஸ்வரனாய் ஸ்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய், "அவாக்யநாத3ர:" (சா2ந்.3–14–2)என்கிறபடியே பரிபூர்ணனான தான் "கதா3 புநஶ்ஶங்க ரதா2ங்க3 கல்பக த்4வஜாரவிந்தா3ங்குஶ வஜ்ரலாஞ்ச2நம் । த்ரிவிக்ரம த்வச்சரணம்பு3ஜத்3வயம் மதீ3யமூர்த்3தா4நமலங்கரிஷ்யதி" (ஸ்தோ.ர–31) என்றும்

''படிக்களவாக நிமிர்த்த நின்பாத பங்கயமே தலைக்கணியாய்'' (திருவாய் 9–2–2) என்றும்– சிலர் அபேக்ஷியாதிருக்க, ''பாத₃ாருந்துத₃மேவ பங்கஜ ரஜ:'' (ஸ்ரீகு₃ண–42) என்னும் ஸௌகுமார்யத்தை யுடைத்தாய், பெரியபிராட்டியார் திருக்கைகளால் வருடவும் பொறுத அந்தத் திருவடிகளைக் காடுமேடுகளென்று பாராதே சேதநாசேதநவிப₄ாக₃ம் பாராதே பரப்பினல், ''இப்படியுபகரிப்பதே!'' என்று இவர்கள் உகக்க ப்ராப்தமாயிருக்க, இவர்களறிவு கேடே ஹேதுவாக விலக்காதொழியப்பெற்றோமே யென்றிரட்டிக்கப் புகுந்த திருவுள்ளத்தை யுடையனும்.

''க்ருதக்ருத்யஸ் தத₃ா ராமோ விஜ்வர: ப்ரமுமோத₃ ஹ'' (ரா.யு₃. 1–85) என்று தம்மோடும் தம்பியாரோடு முண்டான வாஸனையாலே முடியை விலக்குகிறு–னென்று வெறுத்திருந்த பெருமாள், இவன் இசைந்து முடியைவைத்த பின்பு உகந்தாப்போலே, இத்தலையில் அத்₃வேஷமே ஹேதுவாகத் திருவடிகளை வைக்கப்பெறுகையாலே மிகவும் ப்ரீதனுய், எதிர்த்தலை யறியாதிருக்கத் தானேயுகக்கிறது வாத்ஸல்யமிறே; உறங்குகிற ப்ரஜையைத் தாய்கட்டிக் கொண்டு கிடக்கிறது வாத்ஸல்யமன்றோ. இவற்றைப் பிரிந்தால் வ்யஸநமும் தன்னதேயிறே. ''வ்யஸநேஷு மநுஷ்யாணும்'' (ரா.அ.2–40).

[உலகமளந்து] ''வஸிஷ்ட₂சண்ட₃ாளவிப₄ாக₃ம் ஸ்த்ரீபும்விப₄ாக₃ம் ஜ்ஞாநாஜ்ஞாநவிப₄ாக₃ம்'' என்றவற்றைப்பாராதே, எல்லார் தலையிலுமொக்கத்

திருவடிகளைவைத்தபடி. (உலகமளந்து) வைத்த திருவடிகள் தலையிலே வந்திருந்தாலும் உகக்க வறியாத லோகத்தைக் கிடீர் தான் விடாதே யளந்தது! உகக்கவறியாமைக்கு வன்மாவையமிறே (திருவாய். 3–2–2). கு3ணகு3ணநிரூபணம் பண்ணுதே எல்லார் தலையிலுமொக்கத் திருவடிகளை வைத்தபடியாலே, ப4க்திமான்களும் பாதகருமொக்க வாழ்ந்துபோய்த்து. (அண்டமுற நிவர்ந்த நீண்முடியன்) அண்ட3கடாஹத்–திலே சென்று சேர்ந்த திருவபி4ஷேகத்தை யுடையவன். அண்ட3கடாஹம் வெடித்து அடிபிடிக்க வேண்டும்படியிறே அபேக்ஷிதம்பெற்று வளர்ந்தபடி. (அண்டமுற) “அண்டம்மோழை யெழ” (திருவாய் 7–4–1) “நிவர்ந்த” என்கிற ஶப்3த3ம் உயர்வென்றும் ஓங்கியென்றுங் காட்டும்; உறவென்கையாலே – ஓங்கியென்றபடி.

[நிவர்ந்த] பூவலர்ந்தாப்போலே. [நீண்முடியன்] முடிக்கு நீட்சியாவது – உப4யவிபூ4திக்கும் த4ரித்த முடியென்று தோற்றும்படியாயிருக்கை. “ஆதி4ராஜ்ய மதி4கம் பு4வநாநா மீஶதே பிஶுநயந் கில மௌளி:” (வரதராஜ.ஸ்த–25) என்னுமாப்போலே ரக்ஷ்ய வர்க்க3த்தை நோக்கிலிறே ரக்ஷகன் முடிநற்றரிப்பது. “ஒருகாலுங்காமருசீரவுணனுள்ளத் தெண்மதியுங் கடந்து” (திருநெடு–5) என்று திருவடிகளுக்கு வளர்த்தி சொல்லப்ராப்தமாயிருக்கத் திருமுடிக்கு வளர்த்தி சொல்லுகிறது இத்திருவடிகள் அப்ராப்தமான திருவடிகளன்று, ப்ராப்தமான திருவடிகளென்று தோற்றுகைக்காக. தான் அர்த்தி2யாய்ச் சென்று

அர்த்தி$_2$த்வத்தை மாறாதே அவன் கொடுத்தபடியாலே உவந்த உள்ளத்தனாய். அவன்தானறியவுகக்க வொண்ணாதே. [உலக மித்யாதி$_3$] திருக்கையில் நீர்விழுந்தவளவிலே அந்நீரே பற்றாசாகவளர்ந்து அளந்து கொண்டான்.

ஆக இப்படி அர்த்தி$_2$த்வநிரபேக்ஷமாக லோகத்தை இருந்ததே குடியாகத் திருவடிகளாலே விஷயீகரித்தாப்போலே, உம்முடைய நிகர்ஷம் பாராதே, "அரவிந்தப்பாவையுந்தானுமகம்படிவந்து புகுந்து" (பெரியாழ். திரு 5–2–10) என்று நெஞ்சிலே வந்து புகுந்தானேயாகிலும், உம்முடைய சித்தமானது ராக$_3$ாதி$_3$ தூ$_3$ஷிதமாயிருக்கையாலே, "நாஸ்பதீ$_3$" (விஷ்ணு த$_4$ர்மம்.9–11) என்கிறபடியே அங்குக் கால்பொருந்தியிருக்கமாட்டானே; ஆகையால் அத்தை நீர்போக்கப் பாரீரென்ன; [அன்று நேர்ந்த நிசாசரரைக்கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்] கண்டகாட்சியிலே "ஜிதந்தே" (ஜிதந்தே 1–1) என்ன வேண்டியிருக்கிறவனிறே. எதிர்த்த பையல்களை முடிக்கைக்கு வெவ்விய ஶரத்தையுடையவன்.

பெருமாளும், "ஶ்ரியா ஸார்த்$_3$த$_4$ம்" (ஶிவ புராணம்) என்கிறபடியே பிராட்டியும், நித்யஸூரி–களோபாதி *சுற்றமெல்லாமான (பெரு.திரு. 8–6) இளையபெருமாளுமாக த$_3$ண்டகாரண்யத்திலே போய்ப்புக்கு, ப$_4$ரதன் அங்கே வந்து பின்னாட்டுகை யாலேஅங்கிருக்கமாட்டாதே ஜநஸ்த$_2$ாநத்திலே போய்ப்புக்கு அங்கு வர்த்திக்கிற ரிஷிகள் பாடேசென்று "ஆவாஸம் த்வஹமிச்ச$_2$ாமி

ப்ரதி$_3$ஷ்டமிஹ காநநே" (ரா.ஆ. 5–33) என்று உங்கள் ஸகாஶத்திலேயிருக்கப்பாரா நின்றேமென்று இடம் தரவேணுமென்ன; அவர்களும் அங்கேயிருக்க அநுமதிபண்ணி, நன்ருகப் பர்ணஶாலையைச் சமைத்து வாஸ்துப$_3$லிகளுமிட்டு, அங்கே யெழுந்தருளியிருக்க, அவ்விரோதிப்புக்கு விரோதி$_3$களாய்வந்து க$_2$ரதூ$_3$ஷணதி$_3$கள் எதிர்க்க, அவர்களை நோக்கி அந்த ரிஷிகள் தொடுத்ததோரம்புண்டோ? அவர்கள் "ஏஹி பஶ்ய ஶரீராணி" (ரா.ஆ. 6–16) என்னும்படி உருமாய்த்த அந்த ராக்ஷஸரை, தம்முடைய திருக்கைத் திருச்சார்ங்க$_3$ங்களாலே உருக்கெட வாளி பொழிந்த (திருவாய். 8–6–2) சக்ரவர்த்தித்திருமகன், என்னுடைய ராக$_3$ாதி$_3$ தே$_3$ாஷங்களை விவேகஶரஜாலத (ஸாத்விக ஸம்ஹிதை–12–51)த்தாலே ஶமிபித்து, அரவத்தமளியினேடும் அரவிந்தப்பாவை (பெரியாழ். திரு.5–2–10)யினேடும் பேரேனென் றென்னெஞ்சு நிறையும்(திருவாய்.10–8–2)படி புகுந்திருக்கிறவ னென்கிருர்.

[அன்று] ஜநஸ்த$_2$ாநத்திலே இருக்கிறவன்று; ரக்ஷகனவன் ரக்ஷ்யத்தை நோக்கக்கடவதாக வந்து நின்றவன்று. [நேர்ந்த நிசாசரரை] அகவாயிலிருட்சியே யன்றிக்கே, ஸர்ப்பம் உணர்த்தியற்று ராத்ரியிலே புறப்படுமாப்போலே பரஹிம்ஸைக்கு ஏகாந்தமான காலத்திலே வந்து எதிர்ந்த க$_2$ரதூ$_3$ஷணதி$_3$ ராக்ஷஸரை. "நேர்ந்த நிசாசரர்" என்கையாலே விபீ$_4$ஷணதி$_3$களை வ்யாவர்த்திக்கிறது. [அன்று நேர்ந்த நிசாசரர்] "தே தம் ஸோமமிவோத்$_3$யந்தம் த்$_3$ருஷ்டவ

வை த$_4$ர்மசாரிண: । மங்க$_3$ளாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்$_3$ருஹ்ணந் த்$_3$ருட$_4$வ்ரதா: ।।" (ரா.ஆ.1–11) "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமப$_4$வந் கதா$_2$: । ராமபூ$_4$தம் ஜகத$_3$பூ$_4$த்$_3$ ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி।।" (ரா.யு.131–102) என்றும், அநுகூலப்ரதிகூல விப$_4$ாக$_3$மற இவனைக்கண்ட மநுஷ்யர் மங்களாஶாஸநம் பண்ணுவார், அடைவுகெட வாய் புலத்துவாராகிற காலத்திலே, இவர்கள் இங்ஙனே சிலர் எதிர்த்து நசித்துப் போவதேயென்று வெறுக்கிறார் இவர்.

<u>ராமோ ராமோ ராம இதி</u> – பாதம் தலைக்கட்டுகை யாலே மீளுகிறதித்தனையென்றிறே நிர்வஹிப்பது. இத்த்ரைவித்$_3$யத்துக்குப்பொருள் *ரூபௌத$_3$ார்ய கு$_1$ணங்களை வென்ற வடிவழகும், அத்தை அநுப$_4$விக்கக் கொடுக்கையும், கொடாநின்றால் இறுமாப்பற்றிருக்கையும், "பும்ஸாம் தாருண்யஞ்ச" (?) என்று ஸ்த்ரீபும்விப$_4$ாக$_3$மற ப்ரவணராம் ஆகாரமுண்டாயிருக்கையாலே வீதராக$_3$ரைச் சொல்லுகிறது. ப்ராப்தவிஷயப்ராவண்யமிறே ஜிதேந்த்$_3$ரியத்வமாகிறது. <u>ப்ரஜாநாம்</u> –மாதாபிதாக் களுக்கன்று; வஸிஷ்ட்ட$_2$ாதி$_3$களுக்கன்று; ஜநித$_4$ர்மாக்–களுக்கு. <u>கதா$_2$:</u>– லோகயாத்ரைக்குறுப்பாம் வார்த்தைகளும் பெருமாளைப் பற்றியல்லதிராது. <u>ராமபூ$_4$தம் ஜக$_3$தபூ$_4$த்</u>– ஜக$_3$த்தடைய ராமாத்$_3$வைத பார்த்து. "ஐதத$_3$ாத்ம்யமித$_3$ம் ஸர்வம்"(ச$_2$ாந். 6–8–7) என்கிற பொதுவல்ல; <u>ராமபூ$_4$தம்</u>–என்று ராமாத்$_3$வைத பார்த்து. ப்$_3$ரஹ்மாத்$_3$வைதத்தை வ்யாவர்த்திக்கிறது.

பெருமாள் சுண்டுவில் கொண்டு லீலாரஸமநு–ப$_4$விக்கிற காலத்திலேயோ வென்னில்; ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி– "க்$_3$ஹ பச" என்கிற காலத்திலே.

[அன்று] இப்படி எல்லாருமொக்க ப்ரவணராகிற–வன்று, [நேர்ந்தநிசாசரரை] இவ்வடிவழகிலே தோற்று விழாதே ஶரஶஸ்த்ரங்களைத் தூவிக்கொண்டு வந்தெதிர்ந்த ராக்ஷஸரை. [கவர்ந்த] மாரீசஸுபா$_3$ஹு த்$_3$வயத்துக்கிப்பால் ஓரிரைபெறுதே கிடக்கிறவை யாகையாலே, இரைபெறுத ஸர்ப்பம்போலே எதிரிகள் மேலேவிழுந்து க்$_3$ரஸித்தபடி. [வெங்கணை] அவன் தன்னைப்போலேயாய்த்து அம்புகளுமிருப்பது. "தீ$_3$ப்தபாவக ஸங்காஶை: ஶிதை: காஞ்சநபூ$_4$ஷணை:" (ரா.யு. 16–32) என்கிறபடியே – தொடுக்கிறபோது அம்பாய், எதிரிகள் மேலே போய்விழும்போது எரிகிற காலாக்$_3$நி போலே யாய்த்து விழுவது.

"ந த்வாமிச்ச$_2$ாம்யஹம் த்$_3$ரஷ்டும் ராமேண நிஹதம் ஶரை:" (ரா.யு.16–32) என்று *தயரதன் பெற்ற மரதக மணித்தடத்(திருவாய்.10–1–8)திலே புக்கு ஶ்ரமந்தீரமாட்டாதே சாவைக்காண மாட்டுகிறிலேன்; "சரங்களாண்ட தண்டாமரைக் கண்ணனுக்கன்றி யென்மனம் தாழ்ந்து நில்லாதே" (பெரிய திரு 7–3–4) என்கிறபடியே "நீயும் நானும் (திருவாய்.1–10–6)கூடி, *இலங்கை பாழாளாகப் படைபொரு தானுக்குப் பல்லாண்டு (திருப்பல்–3) கூறுவாராய் ஆள்படப் போகாதே!" என்றுனிறே விபீ$_4$ஷணன். [வெங்கணை] வெஞ்சிலை(திருநெடு 21)யினின்றும் புறப்படுகிறவையாகையாலே

வெங்கணையாயிருக்குமிறே. அவன் அநுகூலர்க்குப் புனலுருவாய் (திருநெடு–1), ப்ரதிகூலர்க்கு அனலுரு(திருநெடு–1)வாய் இருக்குமாப்போலே, பொன்னெழுதின பகழிகளுந் தானுமாயிருக்கையாலே, அநுகூலர்க்கு த$_3$ர்ஶநீயமாய், அக்$_3$நிஶிகே$_2$ாபமங்களாகையாலே ப்ரதிகூலர்க்கு ப$_4$யங்க$_3$ரமாய்த்திருப்பது இச்சரங்களும்.

ஆக, “உவந்த வுள்ளத்தனுயுலகமளந்–தண்டமுற நிவர்ந்த நீண்முடியன்” என்று “கோகு$_3$ணவாந்” (ரா.ப$_3$ா.1–2) என்று ப்ரத$_2$ம ப்ரஶ்நமாய் ஆஶ்ரயணீயமான ஶீலாதி$_3$கு$_3$ணத்தைச் சொன்னராய், “அன்று நேர்ந்தநிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக்காகுத்தன்” என்று அநந்தரமாக “கஶ்ச வீர்யவாந்” (ரா.பா 1–2) என்று சொன்ன விரோதி$_4$நிரஸநத்துக்குறுப்பான வீரகு$_3$ணங்களைச் சொல்லுகிறுர். ஆக “மாம்”,“அஹம்” (கீ$_3$தா சரம ஶ்லோகம்.18–66) என்கிற இரண்டினுடைய அர்த்த$_2$மும் அநுஸந்தி$_4$த்தாராய்விட்டது. “உலகமளந்து” என்று–திருவடிகள் விக்ரமித்தபடி சொல்லி, “கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்” என்று திருத்தோள்கள் பராக்ரமித்தபடி சொன்னுர். [காகுத்தன்] இந்த இரண்டு கு$_3$ணமும் உப$_4$யவிபூ$_4$திநாத$_2$த்வ ப்ரயுக்தமன்று; ககுத்ஸ்த$_2$ வம்ஶத்திலே பிறந்து வந்தானைகையாலே ஔத்பத்திகமென்றபடி. ஆக, ஶாத்ருஞாதி$_3$களை சிலையால் வாளி(திருவாய்.6–10–4) யழிந்தபடி சொல்லிற்று.

[கடியார்பொழிலரங்கத்தம்மான்] திருவுலகளந் தருளினத்தால் வந்த ஶ்ரமமும், ஜநஸ்த₂நத்தில் ராக்ஷஸவத₄ம் பண்ணின ஶ்ரமமும் ஆறுகைக்காக, பரிமள ப்₄ரிதமான சோலையையுடைத்தான கோயிலிலே வந்து அந்தத் திருவடிகளையும் திருத்தோள்களையும் நீட்டிக்கொண்டு சாய்ந்தான். பரிவராயிருப்பார், "கொடியார்மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்னேநீ துயில்மேவி மகிழ்ந்தது தான், அடியாரல்லல் தவிர்த்தவசைவோ வன்றேலிப்படி தான் நீண்டு தாவியவசைவோ பணியாயே" (திருவாய் 8–3–5) என்று நீ இங்குவந்து கண்வளர்ந்தருளுகிறது ஹிரண்யராவணாதி₃களை நிரஸித் தத்தால் வந்த ஶ்ரமந்தீரவோ? த்ரைலோக்யத்தையு மளந்துகொண்ட ஆயாஸத்தால் வந்த ஶ்ரமந்தீரவோ? பணியாய்– உன் ஸ்வரங்கொண்டு நாங்களறியும்படி சொல்லாயென்றார்களிறே. பிள்ளாய்! கிடக்கும் போது ஒருமூலையிலே ஒருவரறியாமற் கண்வளர்ந்தா லாகாதோ? இன்னமும் அவர்கள் மறுகிளைகிளைத்து, அவனெங்கேயென்று தேடிக்கொடுவரிலும் கொடிகட்டிக்கொண்டு கிடக்கவேணுமோவென்று வயிறுபிடித்தாரிறே; அதுபோலுமல்லகிடீர் இவன் கண்வளர்ந்தருளுகிறபடி யென்கிறரிவர்.

கொடிகள் த்₃ருஷ்டிகோ₃சரமானதிறே அவன் கிடக்கிறபடியறியலாவது; இது அங்ஙனன்றே; "தூ₃ராத்₃ க₃ந்தே₄ர வாதி" (தை.நா–9) என்கிறபடியே தூ₃ரஸ்த₂ரையுமழைக்குமதிறே. *ஸர்வக₃ந்த₄(சாந்.3–14–2)வஸ்து கண்வளர்ந்தருளுகையாலே கடியார்

பொழிலாயிருக்குமிறே. திருச்சோலையில் பரிமளம் விடாயர்க்கு ஸௌரபிரோபசாரமாம்படி. [அரங்கத்தம்மான்] அவதாரத்துக்குப் பிற்பாடரானுரு மிழவாதபடி இங்குவந்து கண்வளர்ந்தருளுகிறது ப்ராப்தியாலேயிறே. ஆக இத்தால் – பே₄ாக்₃யதை சொல்லிற்று.

[அரைச்சிவந்த வாடையின்மேல்] மேக₄ஶ்யாம மான திருவரைக்குப் பரப₄க₃ரஸாவஹமான திருப்பீதாம்ப₃ரத்தின் மேலே. (சிவந்த வாடையின் மேல் சென்றதாம்) ''சோற்றிலேயெனக்கு மனஞ் சென்றது'' என்னுமாப்போலே ஆஶ்சர்யப்படுகிறூர். [எனசிந்தனேயே] ஆருடைய கூறுடையகண்டு உகக்கக்கடவ நெஞ்சு இதிலேயகப்பட்டது. த்₃ருஷ்டத்திலே லோககு₃ர்ஹிதமாய் அத்₃ருஷ்டத் திலே வெந்நரகிலே தள்ளவுங்கடவதான உடைகளிலே ப்ரவணமான என் மநஸ்ஸு, த்₃ருஷ்டத்தில் ஆகர்ஷகமாய், அத்₃ருஷ்டத்தில் ஸத்₃யபஶ்யந்தி(ருக்₃ வேத₃ம் 1–2–7)க்கு விஷயமான திருப்பீதாம்ப₃ரத் திலே விழுந்து நசைபண்ணு நின்றது. [எனசிந்தனே] திருவடிகளின் சுவடறிந்து பின்பு புறம்பு போகமாட்டாத நெஞ்சு. தீர்த்த₂மாடாநிற்கத் துறையிலே பிள்ளையைக் கெடுத்துத் திருவோலக் கத்திலே காண்பாரைப்போலே, திருவடிகளில் நின்றும் திருப்பீதாம்ப₃ரத்தே கண்டபடி. மநஸ்ஸு என்னுதே ''சிந்தனே'' என்றது – சிந்தா விஶேஷத்தைப்பற்ற. இத்தால்– திருவுலகளந்தருளினத்தையும் ராமாவதாரத் தையும் பெரியபெருமாள் பக்கலிலே ஓரோவகை

களாலே காண்கிறுர்.

ஆக, கீழ் – "கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன" என்று தானே முற்பாடனுய்வந்து விஷயீகரித்தபடியாலே– ஸாத$_4$நப$_4$ாவம் சொல்லிற்று; "சென்றதாம்" என்று – தந்திருவுள்ளம் மேல் விழுந்ததாகச் சொல்லுகையாலே அதி$_4$காரிஸ்வரூபம் சொல்லுகிறது– இங்கு. கீழ்–"நீண்மதிளரங்கம்" என்று – ரக்ஷகத்வம் சொல்லிற்று. "கடியார் பொழிலரங்கம்" என்று பே$_4$ாக்$_3$யதை சொல்லுகிறது – இங்கு. ஆகவிப்பாட்டால் – முதற்பாட்டிலே, "நிமலன் நின்மலன்" என்று – அபேக்ஷாநிரபேக்ஷமாக உபகரிக்கும் ஸௌத்$_3$தி$_4$யையுடையவனென்றதாய்த்துச் சொன்னவர்த்தங் கூடுமோவென்ன; கூடுமென்னு மிடத்திற்கு உத$_3$ாஹரணஞ் சொன்னுராய் நின்றது.(2)

**மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள்**
**சந்திசெய்ய நின்றுனரங்கத்தரவினணையான்**
**அந்திபோல்நிறத்தாடையு மதன்மேலயனைப்**
**படைத்த தோரெழில்**
**உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே.(3)**

அவ: மூன்றும்பாட்டு. (மந்திபாய்) திருப்பீதாம் ப$_3$ரத்தினழகின் மிகுதி திருநாபீ$_4$கமலத்திலே வீசிற்று. முதற்பாட்டிலே "ஆதிபிரான்" என்று – ஜக$_3$த்காரண பூ$_4$தனுய் ஸர்வஸ்மாத்பரனுயிருக்குமென்று சொல்லக் கேட்டவர்கள், "ப்$_3$ரஹ்ம விஷ்ணு ஶிவாத்மிகாம்" (வி.பு.1–2–16) என்று மூவர் ஜக$_3$த்காரணநா(பூ$_4$?)த ரென்று ப்ரஸித்$_3$த$_4$மாயிருக்க இவனே ஜக$_3$த்காரணபூ$_4$த

னென்றறியும்படி யென்னென்ன; ஶாஸ்த்ர முக2த்தாலே நம்முடைய காரணத்வத்தை ப்ரகாஶிப்பிப்புதோமாகில் அது கர்மாதீ4நமான ருச்யநுகூலமாக கமுகின் நிரை போலே அயத2ாவாக ப்ரகாஶிக்குமென்று பார்த்தருளி "த்ரயோ தே3வாஸ் துல்யாஸ் த்ரிதயமித3மத்3வைத மதி4கம் த்ரிகாத3ஸ்மாத் தத்த்வம் பரமிதி விதர்க்காந் விக4டயந் । விபே4ார்நாபீ4 பத்3மோ விதி4ஶிவநித3ாநம் ப4க3வதஸ்தத3ந்யத்3 ப்4ருப4ங்கீபரவதி3தி ஸித்3த4ாந்தயதி ந:॥ (ர.ஸ்த. 1–116) என்றும், "முதலாந்திருவுருவம் மூன்றென்பரொன்றே, முதலாகும் மூன்றுக்குமென்பர், முதல்வா, நிகரிலகுகாருருவா நின்னகத்ததன்றே, புகரிலகு தாமரையின்பூ" (பெரிய திருவ–72) என்றும் சொல்லுகிறபடியே– தன் திருநாபீ4கமலத்திலே ஜக3த் காரணபூ4தராக ப்ரஸித்3த4ரான ப்3ரஹ்மருத்3ரர்களை ஸ்ருஷ்டித்துக்காட்ட, அந்த நாபீ4கமலம் அம்முக2த் தாலே தன்னுடைய மேன்மையையும் அழகையுங் காட்டி, திருப்பீதாம்ப3ரத்திலே துவக்குண்கிற என்னுடைய மநஸ்ஸைத் தன்பக்கலிலே இழுத்துக்கொள்ளாநின்ற தென்கிறார். அநுப4ாவ்யத்தை எல்லைகண்டு மீளுதல், தம்முடைய ஆத3ரம் மட்டமாய் மீளுதல் செய்கிறாரல்லரே; தம்முடைய சாபலமடியாக இழப்புண்கிறாரித்தனையிறே.

வ்யா:– [மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்தி செய்யநின்றா னரங்கத்தரவினணை யான்] கீழ்ப்பாட்டிலே–"உலகமளந்தண்டமுற நிவர்ந்த நீண்முடியன் – கடியார் பொழிலரங்கத் தம்மான்"

என்று – இந்த லோகங்களையடையத் தன் திருவடிகளாலே யளந்துகொண்டார் பெரிய பெருமாள் என்றுரே; அங்ஙனே சொல்லலாமோ? ''அன்று ஞாலமளந்த பிரான் –சென்று சேர் திருவேங்கடம்'' (திருவாய் 3–3–8) என்றன்றோ நம்மாழ்வார் வார்த்தை; திருவேங்கடமுடையான் திருவடிகளைக்காண வேணுமென்று *வழிபாடு செய்த ஸூரிகளும் ''எந்நாளே நாம் மண்ணளந்த இணைத்தாமரைகள் காண்பதற்கு'' (திருவாய் 6–10–6) என்றன்றோ ப்ரார்த்தித்தது; ஆகையாலே இந்த பூ₄மியையடையத் திருவடிகளாலே ஆக்ரமித்து, ''அடிக்கீழமர்ந்து புகுந்தடியீர் வாழ்மின்'' (திருவாய் 6–10–11) என்று தன் திருக்கையாலே, உலகமளந்த பொன்னடி (பெரிய.திரு.5–8–9)யைக் காட்டிக்கொடு நிற்கிற வனுமாய், ''தானேங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடம்'' (நான்.திருவ–45) என்கிறபடியே *அண்டமுற நிவர்ந்த நீண்முடியனுமாய் நிற்கின்றான் திருவேங்கடமுடையானன்றோ என்ன; அந்தத் திருவேங்கடமுடையானுகிறனும் இங்குக் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளே என்கிறார்.

[மந்திபாய் வடவேங்கட மாமலை] திருப்பீதாம்ப₃ரத்தினழகை அநுப₄விக்கச்செய்தே திருநாபீ₄கமலத்தினழகிலே தாமிழுப்புண்ட சாபலத்துக்குப் போலியாயிருக்கையாலே குரங்குகள் நித₃ர்ஸநமாகச் சொல்லுகிறார்.

[மந்திபாய்] திருமலையிலே பலாக்களை வேரேபிடித்துத் தலையளவும் பழுத்துக்கிடக்கையாலே

அங்குத்தைக் குரங்குகள் ஜாத்யுசித சாபலத்தாலே ஒருபழத்தை பு$_{4}$ஜிக்கப் புகுகிறவை மற்றைக் கொம்பிற் பழத்திலே கண்ணையோட்ட, இத்தைவிட்டு அதிலே தாவப்பாய்ந்து திரியா நிற்குமாய்த்து; பெரியபெருமாளுடைய தி$_{3}$வ்யாவயவங்களிலே தாம் ஆழங்காற்படுகிறுப் போலே. *கானமும் வானரமும் வேடுமுடை வேங்கட(நான்.திருவ–47)மிறே. [மந்திபாய்] ஒன்றையொன்று பற்றிமாலையாக நாலாநிற்கும். திருச்சின்னக்குரல் கேட்டவாறே பாய்ந்தோடாநிற்கு மென்றுமாம். பரமபத$_{3}$மும் திருமலையும் கோயிலும் திருவயோத்$_{4}$யையும் திருச்சோலையும் ஒருபே$_{4}$ாகி$_{3}$யா யிருக்கிறபடி; எங்கும் மாறிமாறித் தங்குகை.

[வடவேங்கடம்] திருமலை என்னுதே ''வடவேங்கடம்'' என்கிறது–தமிழர்,தமிழுக் கெல்லைநிலம் அதுவாகச் சொல்லுகையாலே. வேத$_{3}$ஶப்$_{3}$தே$_{3}$ாபப்$_{3}$ரும்ஹண ஶப்$_{3}$த$_{3}$ங்களாலன்றிக்கே தம்முடைய ஜந்மாநுரூபமாகத் தாம் கவிபாடுகிற ஶப்$_{3}$த$_{3}$ம் நடையாடுகைக்கு எல்லை அதுவாகையாலே சொல்லுகிறார்.[மாமலை] பே$_{4}$ாக்$_{3}$யதையின் மிகுதியைச் சொல்லுகிறதாதல்; “பரன் சென்று சேர்” (திருவாய் 3–3–8) என்றும் “முன்னமடைமினோ” (திருவாய் 3–3–10) என்றுஞ்சொல்லுகிறபடியே ஶேஷியானவன் அவனுடைய ரக்ஷகத்வ ஸித்$_{3}$தி$_{4}$க்காகவும் ஶேஷபூ$_{4}$தரானவர்கள் தங்கள் ஸ்வரூபஸித்$_{3}$தி$_{4}$க்காகவும் வந்து சேருகையால் வந்த ஶ்லாக்$_{4}$யதையைச் சொல்லுகிறதாதல்; ஸூரிகள் பரமபத$_{3}$த்தினின்றும் திருவேங்கட

முடையானே அநுப₄விக்கவரும்போது தன்ஸிக₂ரத்தில் இளைப்பாறி வரலாம்படியிருக்கிற உயர்த்தியைச் சொல்லுகிறதாதல்; அன்றிக்கே, உப₄யவிபூ₄தியும் ஒருமூலையிலே அடங்கு மென்னுமாம்.

[வானவர்கள் சந்திசெய்ய] நித்யஸூரிகள் சிந்துபூ(திருவாய்.3–3–2)க்கொண்டு பே₄ாக₃ருபமான ஸமாராத₄நத்தைப்பண்ண, அவன் பரமபத₃த்தி னின்றும் தன்னீர்மை ப்ரகாஸிக்கைக்காக ஆதி₃யான தான் திருமலையிலே வந்தவாறே, *விண்ணவர் கோனை தன்னுடைய மேன்மையை அநுப₄வித்துக் கொண்டு போந்த ஸூரிகள், விரையார்பொழில் வேங்கடவனை நீர்மையை அநுப₄விக்கைக்காகத் திருமலையிலே வருவர்கள்; அந்நீர்மைக்கடியான மேன்மையை அநுப₄விக்கைக்காகத் திருமலையி னின்றும் பரமபத₃த்தேறப்போவர்கள். [நின்றுன்] இந்நிலையாலே ஒருத்₃யோக₃முண்டென்று தோற்றும் படி நின்றுன். பெருமாள், ருஸ்யமுகபர்வதத்திலே மஹாராஜர் தொடக்கமான வாநரஸேனைக்கும் இளையபெருமாளுக்கும் ஒக்க முக₂ங்கொடுத்துக் கொண்டு நின்றுப்போலேயாய்த்து – திருவேங்கட முடையானும், குரங்குகளோடு ஸூரிகளோடு வாசியற அநுப₄விக்கும்படி முக₂ங்கொடுத்துக் கொண்டு நிற்கிறநிலையும். "வநராணாம் நராணாஞ்ச கத₂மாஸீத் ஸமாக₃ம:" (ரா.ஸு.35–2) என்று திருவடியைப் பிராட்டி இங்கிதாகாரங்களறியாதே, குரங்குகளுக்கும் விலக்ஷணரான மநுஷ்யர்களுக்கும் கூட்டரவுண்டான படி எங்ஙனே? "கத₂மாஸீத் ஸமாக₃ம:" த கடாக்ஷபாதமும் ஆபரணபாதமு முண்டென்றறியா

நான்சேரவிட, பின்பு "தோழன்நீ" (பெரிய திரு 5–8–1) என்ன ப்ராப்தமாயிருக்க, நான்பிரிந்து இங்கேயிருக்கக் கூட்டரவுண்டானபடி யென்யென்று கேட்க; "ராமஸுக்$_3$ரீவயோரைக்யம் தே$_3$வ்யேவம் ஸமஜாயத" (ரா.ஸு.35–51) என்று அவர்கள் சேர்ந்த ப்ரகாரமறிந்திலேன், "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" (ரா.அ.31–25) என்கிற இளையபெருமாளும் அருகே நிற்க அவர் பரிகரமான நான் இன்றுவந்து அந்தஃபுர பரிகரமாம்படி கூடினார்கள் என்றானிறே.

[நின்றான்] நித்யஸூரிகள் திருமலையிலே நிற்கிற சீலவத்தையிலே ஈடுபட்டு வந்தாஶ்ரயிக்க, குருடர்க்கு வைத்த அறச்சாலையிலே மிளிர்கண்ணர் புகுரலாமோ வென்று தான் ஆனைக்குப்பாடுவாரைப் போலே ஸந்திகள் பக்கலிலே திருவுள்ளத்தை வைத்தானென்றுமாம். "மங்குல்தோய் சென்னிவட வேங்கடத்தானைக் கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான், திங்கள் சடையேற வைத்தானும் தாமரை மேலானும், குடையேறத் தாங்குவித்துக் கொண்டு" (நான்.திருவ. 43) என்கிறபடியே– ப்$_3$ரஹ்மருத்$_3$ராதி$_3$கள் ஸந்த்$_4$யாகாலங்களிலே வந்து ஸமாராத$_4$நம் பண்ணப் பெரியமேன்மையோடே நின்ற நிலையைச் சொல்லுகிறதாகவுமாம். [நின்றான்] இந்நிலையிலே உத்$_3$யோக$_3$முண்டென்று தோற்றும்படிநின்றான். ஸூரிகள் அந்த உத்$_3$யோக$_3$த்தை அடியொற்றினபடிறே, வடக்குத் திருவாசலாலே வந்துபுகுந்து, திருக்கோயிலிலே படுக்கையிலே சாய்ந்தவனாயிருந்தான்; அவன் கிடக்கிறபடியைக் கண்டு, "நடந்தகால்கள்

நொந்தவோ" (திருச்சந்த—61) என்று வயிறுபிடிக்க வேண்டாதபடி, "நின்றிருந்துவெஃகணைக்கிடந்த தென்ன நீர்மை" (திருச்சந்த—63) என்கிறதிலே போர ப்ரீதராய், இனி ஸம்ஸாரக்கிழங்கெடுத்தாலல்லது கிளம்பானென்று மீண்டுபோனுர்கள். "ஆஸ்தாந்தே கு₃ணராஶிவத்₃ கு₃ணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம் ஸங்க்₂யா பௌ₄மநிகேதநேஷ்வபி குடீகுஞ்ஜேஷு ரங்கே₃ஶ்வர! । அர்ச்ய: ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சக பராதீ₄நா கிலாத்₃மஸ்தி₂தி: ப்ரீணீஷே ஹ்ருத₃யாலுபி₄ஸ் தவ தத: ஶீலாஜ்ஜடீ₃பூ₄யதே ॥ (ர.ஸ்த.2—74)

[அரவினணையான்] புஷ்பஹாஸஸுகுமாரமான அவ்வடிவுக்குப் பொருதபடி, காடுகளிலும் கரைகளிலும் திருவடிகளைக் கொண்டு உலாவின விடாயெல்லாந்தீரும்படி மைத்யமார்த்த₃வ ஸௌரப்₄யங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளினன். "அரங்கத்தரவினணையான்" என்று ஶீலத்தையும் மேன்மையையும் அழகையும் அநுப₄விக்கிருர்.

[அரங்கத்தரவினணையான்] "ஶேஷ்யே புரஸ்தாச்ச₂லாயாம் யாவதந்மே ந ப்ரஸீத₃தி" (ரா.அ.111—14) என்று — ஸ்ரீ ப₄ரதாழ்வானை வளைப்புக் கிடக்கவிட்டுப் போந்து கடற்கரையிலே வளைப்புக் கிடந்தாப்போலே, ஸம்ஸாரிகளைப் பெற்றலல்லது போகேனென்று வளைப்புக்கிடக்கிறுன். சக்ரவர்த்தித் திருமகனைப்போலே முதலில் ஶரணம்புக்கு முகங்காட்டாவிட்டவாறே, "சாபமாநய" (ரா.யு.21—22) என்று சீறுமவரல்லர்; ஆற்றுமையைக்காட்டி

ஶரணம்புக்குக் கிடக்குமவர் இவர்.

[அந்திபோல் நிறத்தாடையும்] கீழ்ச்சொன்ன சிவந்தவாடை ஆப₄ரணகோடியிலேயாய் கழற்றவுமா யிருக்கும்; இது ஸஹஜமென்கைக்குடலாக, "அந்திபோல் நிறத்தாடையும்" என்கிறார். ஸந்த்₄யா ராக₃ரஞ்சிதமான மேக₄ம் போலேயாய்த்துத் திருவரையும் திருப்பீதாம்ப₃ரமுமிருக்கிறபடி. திருமேனி மயில்கழுத்துச் சாயலாயிறேயிருப்பது. அத்தோடு சேர்ந்த திருப்பீதாம்ப₃ரம் ஸந்த்₄யாராக₃ ரஞ்ஜிதமான காளமேக₄ம் போலே ஆகர்ஷகமாயிறே இருப்பது. *அரைச்சிவந்தவாடை பின்னாட்டுகிறபடி யென்றுமாம்.

[அதன்மேல்] அவ்வழகுக்குமேலே. [அயனை யீத்₃யாதி₃] ஜக₃த்காரணபூ₄தனை ப்ரஸித்₃த₄னை சதுர்முக₂னைத் தன்பக்கலிலேயுண்டாக்கி, அதடியாக வந்த மேன்மையாலுண்டான அத்₃விதீயமான அழகையுடையதாய்த்துத் திருநாபீ₄கமலமிருப் பது. லோகத்தில் உத்பாத₃கருடைய அழகு ப்ரஸவாந்த மாயிருக்கும்; இவனை யுண்டாக்கினபின்பு ஒளியுமழகும் மிக்கதித்தனே. "யோ ப்₃ரஹ்மாணம் வித₃தா₄தி– தம் ஹ தே₃வம்" (ஶ்வே 6–18) என்கிற படியே– இவனை ஸ்ருஷ்டித்த பின்பிறே த்₄யேயதமாநதாயிற்று.

[ஒரெழிலுந்தி] "ஸௌந்த₃ர்யாக்₂யா ஸரிது₃ரஸி விஸ்தீர்ய மத்₄யாவருத்₄த₄ ஸ்த₂நால்பத்வாத்₃ விஷமகஜிதாவர்த்தக₃த்தாப₄நாபி₄ ப்ராப்ய ப்ராப்த

ப்ரதி2மஜக4நம் விஸ்த்ருதா ஹஸ்திநாத2! ஸ்ரோதோ–பே4த3ம் ப4ஜதி ப4வத: பாத3தே3ஶாபதே3ஶாத்॥'' (வர.ஸ்த.55) என்கிறபடியே ஸௌந்த3ர்யமாகிற பெரியவாறுனது, திருமுடியாகிற மலைத்தலையினின்றும் அகன்ற திருமார்பாகிற தாழ்வரையிலே வந்து குதிகொண்டு, அங்கே பரந்து கீழ்நோக்கி யிழிந்து, *சிற்றிடை(திருவாய் 5–5–8)யாகையாலே அங்கே யிட்டளப்பட்டு, பின்பு திருநாபி4யாய்ச் சுழியாறுபட்ட தென்னக் கடவதிறே.

[அடியேனுள்ளத்தின்னுயிரே] அடியேனை யென்னுடைய அகவாயில் வர்த்திக்கிற ஹ்ருத3ய மானது. [உந்திமேலதன்றே] ''அடியேன்'' என்று – இப்போது இவர் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்து ''பதிம் விஶ்வஸ்ய'' (தை.நா. 11) ''யஸ்யாஸ்மி'' (யஜு. அஷ்ட–3, ப்3ரா–7) ''பரவாநஸ்மி'' (ரா.ஆர. 15–7) ''த3ாஸபூ4தாஸ் ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மந பரமாத்மந:'' (ஹாரீத ஸ்ம்ருதி–ஈஶ்வர ஸம்ஹிதா) என்கிற ப்ரமாணங்களாலே ''அடியேன்'' என்கிறு ரல்லர். ''கு3ணைர் த3ாஸ்யமுபாக3த'' (ரா.கி. 4–12)ராய் சொல்லுகிறுருமன்று; அழகுக்குத் தோற்று ''அடியேன்'' என்கிறுர். அதிலும் வடிவழகின் ஸாமாந்யத்தைப் பற்றச்சொல்லுகிற வார்த்தையு மன்று; ஓரவயவத்தினழகுக்குத் தோற்றுச் சொல்லுகிற வார்த்தை. ''உயிர்'' என்கிறது மநஸ்ஸை. ''ஊனில் வாழுயிர்''(திருவாய்.2–3–1) என்று கொண்டாடினுப் போலே, வடிவழகு தமக்கு ரஸித்து பே4าக்3யமாம்படி இருக்கையாலே ''இன்னுயிர்'' என்கிறது. சிலை

உண்டாக்குகிறது கிடீர் என்னை யழிக்கிறது. அந்தத் திருநாபீ4கமலம் அதி4காரி புருஷர்களான ப்3ரஹ்மாதி3களை யுண்டாக்கும்; ''அடியேன்'' என்றிருப்பாரை யழிக்கும்.

பிள்ளையழகிய மணவாளரரையர், பெருமாள் திருவடிகளிலே புக்கு, ''நாயன்றே! அடியேன் திருவேங்கடமுடையானைத் திருவடித்தொழுது வரவேணுமென்று நினையா நிற்கிறேன்'' என்று விண்ணப்பஞ்செய்ய; ''வாரீர்! அமலனாதிபிரானை யொருகால் இசைசொல்லிக் காணீர்'' என்று திருவுள்ளமாக; பிள்ளையும் ஒருகால் இசையை விண்ணப்பம்செய்யக் கேட்டருளி, ''இனிப்போகிலும் போம், இருக்கிலுமிரும்'' என்று திருவுள்ளமாயினார். முதலில் கண்படுவது திருநாபீ4கமலமிறே.

இப்பாட்டில் – பெரியபெருமாள் பக்கலிலே திருவேங்கடமுடையானுன தன்மையுமுண் டென்கிறது. (3)

**சதுரமாமதிள் சூழிலங்கைக்கிறைவன் தலைபத்து**
**உதிரவோட்டி ஓர்வெங்கணையுய்த்தவனோத வண்ணன்**
**மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான் திருவயிற்**
**றுதர பந்தமென்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே. (4)**

அவ: நான்காம்பாட்டு. திருநாபீ4கமலத்தோடே சேர்ந்த திருவுத3ரப3ந்த4நத்தை அநுப4விக்கிறார். முதற்பாட்டிலே – ஜக3த்காரணபூ4தனானவன், தம்முடைய அபேக்ஷாநிரபேக்ஷமாகத் தம்மை விஷயீகரித்து, தம்முடைய திருவுள்ளத்திலே

